உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிதம்பர சிவாலய தரிசனம்



...நூற்பதிப்புக் கழகம்
...ம்பரம்.

1950 [விலை அணு 12.

சி. கு. செ. நூ. கழகம் உ வெளியீடு:- 2

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிதம்பர சிவாலய தரிசனம்




சிதம்பரம்

ஸ்ரீ மௌனதேசிகராதீனம்

ஸ்ரீமத் சபாபதி சுவாமியவர்களால்

இயற்றப்பட்டது.






முதல் பதிப்பு

குமரன் செந்தமிழ் நூற்பதிப்புக் கழகம்,
சிதம்பரம்.

 1950 [விலை அணா. 12.

முதற்பதிப்பு: 27—7—50
பிரதிகள் 1000

## சிறப்புப் பாயிரம்

---

௧. இனியன் கூறியது.

சீரோங்கும் திருத்தில்லைச் செய்திகளைச் சிதம்பரசி
வால யப்பேர்ப்
பேரோங்கு திருநூலாய்ப் பெட்போங்க வகுத்தளித்தான்
பெருமை நீடி
ஏரோங்கு மவுனகுரு திருமடத்து இறைவனை
இயைந்து நாளும்
தாரோங்கு சிவமுனிவன் சபாபதிஎம் பெருமானுஞ்
சதுரன் தானே.

பாண்டியன் அச்சகம், சிதம்பரம்.

5-1

உ

சிவமயம்

# முகவுரை

---

"தீர்த்தம் என்பது சிவகங் கையே
ஏத்தரும் தலம் எழிற்புலி யூரே
மூர்த்தி அம்பலக் கூத்தன துருவே."
(சிதம்பர செய்யுட் கோவை)

மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூன்றனும் மேன்மையுற்று விளங்கும தில்லைப்பதியின் சிறப்பு எவராலும் எடுத்தியம்புதற்கரியதாகும். மிகுந்த மேன்மை வாய்ந்திலங்கும் இப்பதியிலுள்ள ஆலயத்தை வழிபடுவதற்கெனச் செந்தமிழ் நாட்டின் பலபாகங்களிலிருந்தும், பிறநாடுகளிலிருந்தும் நாடோறும் ஆயிரக் கணக்கான மக்கள் வருகிறார்கள்.

அவர்களிற் பெரும்பாலோர். பெயரளவில் தெரிசனம் செய்துகொண்டு, பல செய்திகள் தெரிந்து கொள்ளாமலும் பல ஆலயங்கள் தெரிசிக்காமலும் திரும்பி விடுகிறார்கள். ஏனைய தலங்களுக்கெல்லாம, அத்தல விசேடங்களை அறிவிக்கும் ஒவ்வொரு நூல் வெளியிடப்பட்டுப் பொதுமக்களுக்கு நலன் தருமுறையிலிருந்து வருகின்றன. ஆதலின் இததலத்திற்கும் அத்தகைய விளக்கமான நூல் ஒன்று இருத்தல் வேண்டுமென அன்பர்கள் கேட்டுக்கொண்டதற் கிணங்கிச் சிதம்பரம், ஸ்ரீ மௌனதேசிகராதீனம் ஸ்ரீமத் சபாபதி சுவாமிகள் இந்நூலை எளிய தமிழ் நடையில் யாவருக்கும் பயன்படும் முறையில் எழுதியிருக்கிறார்கள்.

இந்நூலின்கண், திருத்தில்லையைப் பற்றிய சில குறிப்புக்கள், பழைய வரலாறுகள், ஆலயதரிசனம்

செய்யும் முறைகள், சிற்சபை நிர்மாண விளக்கம், நடராஜமூர்த்தியின் அமைப்பு, திருவுருவத் தோற்றத்திற்குக் காரணம் முதலிய பல விஷயங்கள் பற்றி விளக்கமாக எழுதப்பட்டிருக்கிறது. சில நாட்களிலேயே எழுதி அச்சிடவேண்டியிருந்த காரணத்தால், மேலும் சேர்க்க வேண்டி எழுதியிருக்கும் பகுதிகள் விடப்பட்டிருப்பினும் அடுத்த பதிப்புகளில அவைகள் சேர்க்கப்படும். இதில் காணப்படும் பிழைகளையும், மேலும் சேர்க்கவேண்டிய செய்திகளையும் அன்பர்கள் தெரிவிப்பார்களாயின் அடுத்த பதிப்புக்களுக்கு உதவியாகும்.

சிதம்பரம்
27—7—50

இங்ஙனம்
குமரன் செந்தமிழ் நூற்பதிப்புக் கழகத்தார்

---

# பொருளடக்கம்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிதம்பர சிவாலய தரிசனம்

---

## கடவுளர் வணக்கம்

### கற்பகப் பிள்ளையார்

தன்னோங்கு மலரடியும் தளிரோங்கு சாகைகளும்
மின்னோங்கு முகக்கொம்பும் விரவியகண் மலர்களுமாய்
மன்னோங்க நட்மாடும் மன்றோங்கும் மதிற்குடபால்
பொன்னோங்கல் முன்னோங்கும் பொற்பமர்கற் பகம்
போற்றி. (1)

### முருகக் கடவுள்

காந்திமுக மலர்போற்றி கற்பதரு எனவருளுங்
கருணை போற்றி
வாய்ந்ததுணைப் புயம்போற்றி வாமகரம் இடைசெறிந்த
மாண்பு போற்றி
சேர்ந்ததண்ட கரம்போற்றி கோவணநீ டெழில்போற்றிச்
சித்தாந் தத்தில்
போந்தபொருள் அருளுமலைக் குமரநா யகன்திருத்தாள்
போற்றி போற்றி. (2)

### நடராசர்

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம். (3)

ஆதியாய் நடுவும் ஆகி அளவிலா அளவும் ஆகிச்
சோதியாய் உணர்வும் ஆகித் தோன்றிய பொருளும் ஆகிப்
பேதியா வேகம் ஆகிப் பெண்ணுமாய் ஆணும் ஆகிப்
போதியா நிற்கும் தில்லைப் பொதுநடம் போற்றி போற்றி.

கற்பனை கடந்த சோதி கருணையே உருவம் ஆகி
அற்புதக் கோலம் நீடி அருமறைச் சிரத்தின் மேலாம்
சிற்பர வியோமம் ஆகும் திருச்சிற்றம் பலத்துள் நின்று
பொற்புடன் நடஞ்செய் கின்ற பூங்கழல் போற்றி போற்றி.

சீராரும் சதுர்மறையும் தில்லைவாழ் அந்தணரும்
பாராரும் புலிமுனியும் பதஞ்சலியும் தொழுதேத்த
வாராரும் கடல்புடைசூழ் வையமெலாம் ஈடேற
ஏராரும் மணிமன்றுள் எடுத்ததிரு அடிபோற்றி. (6)

காரார் மிடற்றாய் அளிசூழ் தரு பொற்கடுக்கைத்
தாரார் புயனே சிவகாம சவுந்தரிக்கோர்
சீரார் மணவாள என்றன்குல தெய்வமே நீ
பாராய் கடைக்கண் எனதெண்ணம் பலிக்க இன்றே (7)

திங்களார் சடையில் கங்கைநீர் துளிப்பத்
திருந்திழை உமையுளங் களிப்பப்,
பொங்கரா வொடுநற் புலிமுனி வர்கண்மால்
போதயன் அமரர்கள் போற்றத்,
துங்கநான் மறைகள் துதித்திட ஐந்து
தொழில்விரிந் திடப்பொது அதனில்
செங்கழல் அதிர நடஞ்செயும் பொருளைத்
தினம்பணிந் திடரொழித் திடுவாம். (8)

## சிவகாமி

அருள்உருவாய் உயிர்கள்தமக் கன்னை ஆகி
அஞ்ஞானந் தனையகற்றி அமலம் ஆகி

மருள் இலதாய் மெய்ஞ்ஞானம் ஆகும் முத்தி
வாய்த்திடவே காத்தருளி வானோர் ஏத்த
இருள்கெடவே மிளிரும்இரும் கழல்கள் ஆர்ப்ப
இறைபுரியும் திருநட்த்தால் களித்து வாழும்
தெருள்மருவும் மறைநான்கும் பரவுந் தில்லைச்
சிவகாம சுந்தரியைச் சிந்தை செய்வாம். (9)

## சிவபெருமான்

ஊனாகி ஊனுள் உயிராய் உயிர்தோறும் ஆகி
வானாதி ஆன பொருளாய் மதியாகி வெய்யோன்
தானாகி ஆண்பெண் உருவாகிச் சராசரங்கள்
ஆனான் சிவன்மற் றவன்நீள்கழற் கன்பு செய்வாம். (10)

## உமையவள்

மாற்கரிய செம்பதத்தோன் தேவி ஆகி
வல்வினையேன் எனதாவிக் காவி யாகி
மேற்கருணைத் திருவுருவம் உடையள ஆகி
வித்தகமாய் ஐந்தொழிற்கும் வித்தாய் நின்று
சேற்கருங்கண் தவளநகைக் களபக் கொங்கைச்
சிற்பரையிங் கெமையாளும் உமையாள் செம்பொன்
காற்கமலம் தலைக்கமலம் பொருந்தத் தாங்கிக்
கைக்கமலம் குவித்தருந்துங் கமலந் தீர்வாம். (11)

## தட்சணாமூர்த்தி

கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா றங்கமுதல்
கற்ற கேள்வி,
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய்
மறைக்கப் பாலாய்,
எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை இருந்தபடி
இருந்து காட்டிச்
சொல்லாமல் சொன்னவரை நினையாமல் நினைந்துபவத்
தொடக்கை வெல்வாம். (12)

## திருநந்திதேவர்

வந்திறை அடியில் தாழும் வானவர் மகுட கோடி
பந்தியின் மணிகள் சிந்த வேத்திரப் படையால் தாக்கி
அந்தியும் பகலும் தொண்டர் அலகிடும் குப்பை யாக்கும்
நந்தியெம் பெருமான்பாத நகைமலர் முடிமேல்வைப்பாம்.

## திருமால்

கண்ணகன்ஞா லந்தரும்எண் கண்கடவுள்
தனைஉந்திக் கமலம் பூத்த
பண்ணவன்பார் முழுதுமளந் துண்டுமிழ்ந்த
பரமன்உயர் பச்சை மேக
வண்ணன்மத கரிக்கருளும் கடவுள்நெடுந்
தடங்கடற்குள் வளரா நின்ற
அண்ணலஞ்சேல் வடிவெடுத்த நாரணன்பொன்
தாமரைத்தாள் அகத்துள் வைப்பாம். (14)

## திருமகள்

மடற்கமல நறும்பொகுட்டில் அரசிருக்குஞ்
செந்துவர்வாய் மயிலே மற்றுன்
கடைக்கண்அருள் படைத்தன்றோ மணிவண்ணன்
உலகம்எலாம் காவல் பூண்டான்
படைத்தனன்நான் முகக்கிழவன் பசுங்குழவி
மதிபுனைந்த பரமன் தானும்
துடைத்தனனின் பெருஞ்சீர்த்தி எம்மனோ
ரால்எடுத்துச் சொல்லற் பாற்றோ. (15)

## நால்வர்

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்
போற்றி
ஆழிமிசைக் கன்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்தொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி. (16)

## அறுபத்துமூவர்

தத்து மூதெயின் மூன்றுந் தழல்எழ
முத்து மூரன் முகிழ்த்த நிராமய
சித்து மூர்த்திதன் தாள்இணை சேர்அறு
பத்து மூவர் பதமலர் போற்றுவாம். (17)

## சண்டேசுரர்

மணத்தாது செறிமலரும் செழுங்கனியும்
கொணர்ந்துசிறு மணலை வாரி
அணைத்தாதி சிவன்வடிவாய் அமைத்தருளி
அவற்கினிதா ஆட்ட வேண்டிக்
கணத்தாவின் பால்கறந்து நிறைத்துவைத்த
கலசமெல்லாம் கவிழ்த்த தாதை
இணைத்தாளைத் தடிந்திறைவர் துணைத்தாளை
அடைந்தவர்தாள் இறைஞ்சுவோமே. (18)

## தோற்றுவாய்

பூக்களுள் தலைமை பெற்றோங்கும் தாமரைப் பூவில் வாழும் நான்முகனால் படைக்கப்பெற்ற இந்நிலவுலகில், எண்ணற்ற சிவப் பதிகள் சீர்பெற்றுத் திகழ்கின்றன. அவைகள் எல்லாவற்றுள்ளும் தலைமை பெற்று விளங்குவது சிதம்பரம் என்னும் தில்லைப் பதியாகும். இப்பதி புராணேதிகாசங்களால் மட்டும் அல்லாமல் வேத சிவாகமங்களாலும் உபநிடதங்களாலும் புகழ்ந்தோதப் பெறும் பெருஞ் சிறப்பு வாய்ந்தது. இப்பதியின் பெருமையையும் மூர்த்திகளின் விவரங்களையும் பழைய நூல்கள் வாயிலாக அறிந்துகொள்வதென்பது மிகக் கற்றவர்க்கேயன்றி ஏனையோர்க்கு இயலாததாம்.

இவ்வூரைப் பற்றிய வரலாறுகளைக் கூறும் நூல்கள் வேறு சில தோன்றியிருப்பினும், அவைகள் படித்துச் செய்தியை விளக்கமாக அறிந்துகொள்ளுதற்கு இயலாததாக இருத்தலின் இந்நூல் எழுதப் பெறுகிறது.

## நூல்

# 1. திருத்தில்லை

செந்தமிழ் நாட்டின் நடுநாயகமாய், தென்னிந்திய இருப்புப் பாதையில், சென்னை எழும்பூர் புகைவண்டி நிலையத்திலிருந்து தெற்கே 151-வது மைலில், கூடலூர் மாயூரம் சந்திப்புகட்கிடையே ஒரு புகைவண்டி நிலையமாகச் சிதம்பரம் என்னும் பெயருடன் விளங்குகின்றது. இவ்வூர் நெடுங்காலமாகவே நகர் மன்ற ஆளுகையின் கீழ இருந்து வருவதால் பழங்காலந் தொட்டே பெரிய வூராக இருந்து வருகிறதென்பது புலனாகும்.

சிதம்பரத்தின் தெற்கிலும், வடக்கிலும் நான்கு மைல் தொலைவில் கொள்ளிடம், வெள்ளாறு என்னும் இரண்டு பேராறுகள் ஓடுகின்றன. பாலமான் என்னும் சிற்றாறு நகரத்திற்கும் புகைவண்டி நிலையத்திற்கும் இடையே தெற்கிலிருந்து வடக்காக ஓடுகிறது. இது கங்கைப் பேராறு காசியில் தெற்கு வடக்காக ஓடுவதை நினைப்பூட்டுவதாக இருக்கிறது. இவ்வாற்று நீரும, கொள்ளிடத்தின் தண்ணீர்கொண்டு இந்நகரத்திற்குக் குழாய் அமைத்திருப்பதால் கிடைக்கும் தண்ணீரும், நகர மக்களுக்கும, வருபவர்கட்கும வசதி தருவதாக இருக்கிறது. பல குளங்களுமிருக்கின்றன. பொதுவாகக் கருதுமிடத்து நீர் வளஞ் செறிந்த வூரேயாம்.

**வசதி:** பல அறச்சாலைகளும், பிற பொது நிலையங்களும உள்ளன. சிவாலய பூசகர்களாகிய தீக்ஷிதர்களிற் பலர் வருபவர்கட்கு இடவசதி முதலியன செய்து கொடுக்கின்றனர். இவ்வூரில ஏராளமான அறச்சாலைக ளிருப்பினும், அவைகளிற் பல அறச்சாலைகள் வாடகைக்கு விடப்பட்டு அலுவலகங்களாகவும், பொருள் சேகரித்து

வைக்கும் பண்டக சாலைகளாகவும் வாணிகம் செய்யும் கடைகளாகவும், வேறு பலவாகவும் இருந்து வருவதால், பொது மக்களுக்கு அவ்விடங்களில் இடம் கிடைப்ப தரிதாயிற்று.

**ஆலயம்:** புகைவண்டி நிலையத்திலிருந்து ஆறு பர்லாங்கு தொலைவில் இருக்கிறது. பற்பல வீதிகள் ஆலயத்தைச் சூழ்ந்து இருக்கின்றன. தேரோடும் திரு வீதி மிகுந்த அகலமும், அழகும் உடையதாம். வானோங்கு திருமதில்களுடனும், நான்கு பெரிய திருக் கோபுரங்களுடனும், விளங்கும் ஆலயத்தின் அமைப்புக் களையும், வியக்கத்தக்க வேலைப்பாடுகளுடன் விளங்கும் மண்டபங்களின் சிறப்புக்களையும், பிறவற்றையும் நேரில் கண்டுகொள்க.

## தில்லைப் பதியின் சிறப்பு

ஐம்பெரும் பூதங்களுள் வான் என்னும் பூதத்திற் குரிய தலமாக இதனைக் கொள்வது மரபு. எல்லாப் பூதங்கட்கும் முன்னைய பூதம் வான் ஆதல்போல அவை களுக்குரிய தலங்களெல்லாவற்றுள்ளும் முதன்மை பெற்றது இத்தலமாம். தேவாரப் பாடல்பெற்ற திருத் தலங்களுள் முதன்முதலில் வைத்து எண்ணப்படுவது இது. சைவ சமயாசாரியர்கள் எனைத் தலங்கட்கும் சென்று பாடிய தேவாரப் பதிகங்கள் அனைத்தையும் ஒன்று சேர்த்து இப்பதியிலேயே அக்காலத்து வைத்து இருந்தனர் என்னும் வரலாற்றினாலும் இதன் முதன்மை அறியக் கிடக்கின்றது.

அம்பலவாணருடைய தெய்வீகக் கலைகள் பலவற் றுள் ஒரு கலை, இந்நிலவுலகத்திலுள்ள எல்லாத் தலங்களிலும் மேவி, அன்பர்கட்கு வேண்டுவன அருள் செய்து நள்ளிரவில் மீண்டும் இத்தலத்திற்கு வந்து

ஒடுங்குகிறதென்பது வழக்கம். இத்தலத்தில் எல்லாக் கலைகளுடன் கூடிய மூர்த்தியைத் தரிசிப்பதற்கு வாய்ப்பாக இருத்தலின்* அர்த்தசாம தரிசனம் மிக்க சிறப்புடையதாம்.

> "காரண மானதன் கலையி னோர்கலை
> தாரணி தனிலுறுந் தலங்கள் மேவிவந்
> தாரண வுரைப்படி அடங்கு மம்பலப்
> பூரண நடேசனைப் போற்றல் செய்குவாம்."

என்னும் கவியினால் இக்கருத்தை நன்குணரலாம்.

பூவுலகத்திற் சிறப்புற்றிருக்கும் பல தலங்களுள்ளும், திருவாரூர், காசி, சிதம்பரம் என்னும் மூன்று தலங்கள் சிறந்தன. திருவாரூரில் பிறந்தவர்களும், காசியில் இறந்தவர்களும், சிதம்பரத்தில் சிவபெருமானுடைய திருவடிகளைத் தரிசித்தவர்களும், முத்தியை அடைவார்கள்.

திருவாரூரில் பிறந்திடுதல், முன்செய்த புண்ணிய மிகுதியினாலே, தானே நேர்படினல்லது செய்கையினால் எய்துதற் கரியதாம். காசியில் இறக்கலாமெனின், பிறர் பொருள் கொள்ளாது, பாவத்துக்குப் பயந்து தரும நெறியினாலே தேடிய பொருள்கொண்டு காசியை அடைந்து, நல்லொழுக்கத்துடன் இறக்கும் வரை அப்பதியில் இருந்து வருவது என்பதும் எளிதில் முடிவதன்று. சிதம்பரத்திலோ எனின் சிவபெருமானுடைய திருவடிகளைத் தரிசித்த மாத்திரத்தே முத்தி சித்திக்கும்.

---

* இத்தலத்தில் அர்த்தசாமக் கட்டளையைக் காரைக்குடி மெ. செ. குடும்பத்தினர் நெடுங்காலமாக நடத்தி வருகின்றனர்.

" ... ... ... ... ... ... ... ... ... ...
ஆரூர்ப் பிறத்தல் நேர்படி னல்லது
செயற்கையி னெய்தும் இயற்கைய தன்றே

அதா அன்று

காசியில் இறத்தல் நோக்கித் தேசம்விட்
டறந்தலைத் தந்த அரும்பொரு டாங்கிப்
பிறன்பொருள் கொள்ளாப் பேரறம் பூண்டு
கழிபெருங் கான நீங்கி வழியிடைத்
தீப்பசிக் கிரங்கி நோய்ப்பனிக் கொதுங்கிப்
பல்பிணிக் குடைந்து செல்லுங் காலத்
திடைச்சுரத் திறவா தின்னுயிர் தாங்கிக்
கிடைத்தன னுயி னடுத்தநல் லொழுக்கமோ
டுடல்விடு காறுமத் தடநகர் வைகி
முடிவது கடைபோக முடிவதோ அரிதே,

அதனுற்

சிற்றுயிர்க் கிரங்கும் பெரும்பற்றப் புலியூர்
உற்றநின் றிருக்கூத் தொருகா னேக்கிப்
பரகதி பெறுவான் திருமுன் பெய்தப்
பெற்றனன் ... ... ... "

என்னும் சிதம்பர மும்மணிக் கோவைச் செய்யுள் இக் கருத்தையே வலியுறுத்துதல் காண்க.

தேவாரத் திருமுறைகளில் ஒவ்வொரு பதிகத்திலும் முன்னும் பின்னும் திருச்சிற்றம்பலம் என்று எழுதப்பட் டிருப்பதன்றி; ஓதும்பொழுதும் முன்னும் பின்னும் திருச்சிற்றம்பலம் என்று சொல்லி வணக்கம் செய்வது வழக்கமாக இருந்து வருகிறது. இத்தலத்தின் சிறப்புக் கள் மிகப் பல. அவைகளைப் புராணங்களிலும், வேறு பல நூல்களிலும் பரக்கக் காணலாம். வடமொழியிலே யுள்ள சிதம்பர மான்மியம, புண்டரீகபுர மான்மியம்,

வியாக்கிரபுர மான்மியம், ஏமசபா மான்மியம், தில்லைவன மான்மியம் என்னும் நூல்கள் இத்தலத்தின் பெருமைகளைக் கூறுவனவாம். சூதசம்ஹிதை முதலிய வேறு பல நூல்களிலும் இத்தலத்தின் பெருமைகள் கூறப்படுகின்றன.

**தலத்தின் பெயர்கள் :** வியாக்கிரபாத முனிவர் பூசித்த காரணத்தால் புலியூர் என்றும், தன்னைத் தரிசித்தவர்கட்குத் தன்னிடத்தே பெரும் பற்றை விளைவித்தலின் பெரும்பற்றப்புலியூர் என்றும் பெயர். இம் முனிவராற் பூசிக்கப்பட்ட ஏனை நான்கு தலங்களுள்ளன. அவை ஓமாம்புலியூர், எருக்கத்தம்புலியூர், திருப்பாதிரிப் புலியூர், பெரும்புலியூர் என்பவைகளாம். இவ்வூர் முன்னை நாளில் தில்லை என்னும் ஓர்வித மரங்களடர்ந்த காடாக இருந்தமையால் தில்லைவனம் என்னும் பெயரால் வழங்கப்பட்டது. புண்டரிகபுரம் முதலிய வேறு பல பெயர்களுமுண்டு.

**கல்வெட்டுகள் :** இத்தலத்தைப்பற்றிய கல்வெட்டுகள் மிகுதியாகவும், சிறந்தவைகளாகவும் இருக்கின்றன. விரிவஞ்சி விடுத்தனம். வாய்ப்பு ஏற்படும்போது தனித்து ஒரு நூலாக அவைகள் வெளியிடப்பெறும்.

**கோயிற் பூசகர்கள் :-** மிகப்பழங்கால முதற்கொண்டே இத்தில்லையில் வாழ்ந்து வந்த காரணத்தால் தில்லைவாழ் அந்தணர் என்று சிறப்பித்துக் கூறப்பெறுபவர்கள்; இக்கோயிலிற் பூசகர்கள் ஆவார்கள். இவர்களை முன் காலத்தில் பிரமதேவர் தாம் கங்கைக்கரையில் உள்ள அந்தர்வேதியிலே நடத்திய யாகத்திற்கு அழைத்துக்கொண்டு போனார். வியாக்கிரபாத முனிவர் கட்டளைப்படி இரணியவன்மர் மீண்டு சிலகாலத்திற்குப்

பின் அழைத்து வந்தார். தில்லை எல்லையில் அவர்கள் ஏறிவந்த இரதங்களை நிறுத்தி அம்முனிவருக்கு எண்ணிக்காட்டும்போது ஒருவர் குறையக்கண்டு வருந்துதலும் நடராசப் பெருமான் அசரீரியாக "நாம் அவருள் ஒருவர்" எனக்கூறினர் என்பர். இவ்வித சிறப்புடைய இவர்களைத் திருஞான சம்பந்த மூர்த்திசுவாமிகள் இத்தலத்திற்கு வந்தபோது பார்த்துத் தாம்கண்ட காட்சியைத் தில்லைத்தேவாரத்திலே வைத்து "நீலத் தார்கரிய மிடற்ருர் நல்ல நெற்றிமேலுற்ற கண்ணிஞர் பற்று, சூலத்தார் சுடலைப்பொடி நீறணிவார் சடையார், சீலத்தாரர்" என்று பாடியிருக்கின்றனர். அன்றியும், திருநாவுக்கரசு சுவாமிகளால் இத்தலத்துத் தேவாரத்திலே "திருவுடையந்தணர் வாழ்கின்ற தில்லைச்சிற்றம்பலவன்" என்று போற்றப்படும் பெருஞ் சிறப்பு வாய்ந்தவர்கள் எக்காலமும் தில்லையிலேயே வாழ்பவர்கள். "தில்லைப்பெண் எல்லை தாண்டாது" என்பது பழமொழி. இவர்களைத் தீட்சிதர்கள் என்று வழங்கிவருகிருர்கள்.

திருவாதிரைக்களி:- சேந்தநாயனுர் அன்போடு படைத்தகளியமுதை நடராசப்பெருமான் மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டனர் என்பது சரிதம். அது திருவாதிரைநாளில் செய்யப்பெற்றது. ஆதலின் திருவாதிரைக் களி என்று சிறப்பித்துக் கூறப்படுகிறது. இன்றும் திருவாதிரை நாளில் நிவேதிக்கப்பெறுகிறது. இதனை மாதவச்சிவஞான யோகிகள் "வரையேல் தவிட்டமுதம் சேந்தனிட அருந்தினை" என்று சிறப்பித்துக்கூறியுள்ளனர்.

**சிதம்பராலய பூசாவிதி:-** சிதம்பர சிவாலயத்திலே நித்திய பூசை, திருவிழா முதலியனவெல்லாம் செய்ய வேண்டியதற்குரிய விதிகளை இரணியவன்மர் பதஞ்சலி

முனிவரைக்கொண்டு வேத சிவாகமப்படியே ஒருபத்ததியாய்ச் செய்வித்ததுமன்றி, அதனை யானைமேலேற்றி வீதி வலம் வருவித்து ஆலயத்துள் கொண்டுவந்து அவ்விதிப்படியே பூசை திருவிழாவெல்லாம் நடத்தி வந்தார். இவ்வாலய பூசை இந்நூலைத்தழுவியே நடைபெற்றுவருகிறது.

திருவாபரணங்கள்:- நடராசப் பெருமானுக்கு அரசர்களாலும் பெருநிலக்கிழார்களாலும், நகர தனவைசியர்களாலும், மற்றும் பல அன்பர்களாலும் வழங்கப்பட்ட் விலையுயர்ந்த திருவாபரணங்கள் ஏராளமாக உள்ளன. நடராஜமூர்த்திக்கு ஆனி மார்கழி உற்சவங்களில் தேர்த் திருவிழாமுதல் மூன்று நாட்களுக்கு மட்டும் அவை அணியப்படும். இவைகளுக்குச் சரியான கணக்குகள் வைத்திருக்கிறார்கள். அவைகளிற் பல விலைவரம்பறியா மணியமைக்கப்பட்ட பொற்கலன்களும் இருக்கின்றன. பொன்னினாலும் வெள்ளியினாலும் செய்யப்பட்ட வாகனங்களும் உண்டு.

நிருவாகங்கள்:- நெடுங்காலமாக ஆலயப்பூசகர்களாகிய தீக்ஷிதர்கள், தங்களுக்குள்ளே ஒரு பொதுச் சபையமைத்து அச்சபையின் பரிபாலனத்தின் கீழ் சகல நிருவாகங்களையும் கவனித்து நடத்திவருகிறார்கள். ஆதலின் நிருவாகங்கள் செவ்வனே நடைபெற்று வருகின்றன.

சொத்துக்கள்:- அரசர் பெருமக்களாலோ, ஏனையர்களாலோ இவ்வாலயத்திற்கு மானியங்கள் வழங்கப்பட்டதாகத் தெரியவில்லை. ஒவ்வொரு கட்டளைகளையும் அவரவர்களே சொந்த முறையிலோ, பொதுவாகவோ, ஏற்படுத்தி நெடுங்காலம் இடைவிடாது நடைபெற்று

வரத்தக்க முறையில் சொத்துக்கள் வாங்கிவைத்துத் தாங்களே நடத்திவந்திருக்கிறார்கள். அவர்கள் வழித் தோன்றல்கள் அதன்பின்னர் அந்தச் சொத்துக்களின் வருமானங்களைக்கொண்டு நடத்திவருகின்றனர். இந்த முறையிலேயே நித்திய பூசைகள் திருவிழாக்கள் நந்த வனம், பசுமடம், முதலிய வேறு பல கட்டளைகள் எல் லாம் ஒவ்வொருவரால் நடத்தப்பட்டு வருகின்றன. பச்சையப்ப முதலியாரால் சிதம்பர சிவாலயத்திற்கு ஏற் படுத்தப்பட்டு நடந்து வரும் கட்டளைகள் பலவாகும்.

மின்சாரதீபங்கள்:- நெடு நாட்கள் வரை ஆலயத் துள் மின்சார மின்சாரதிபங்கள் இருத்தல் கூடாதென்ற நினைவுடையவர் பலர் இருந்தமையால், போடப்படாமல் இருந்துவந்தது. விலை வாசி உயர்வினாலும், கால நிலையினாலும் மற்ற விளக்குகள் குறைவுபட்டதால் பொதுமக்களுக்கு இராக்காலத்தில் போதிய வெளிச்ச வசதியில்லாதிருந்தது. புதுச்சேரியிலுள்ள பழநியாண்டி முதலியார் இதனைக்கோவில் பொது தீக்ஷிதர்களுக்குத் தக்க முறையில் எடுத்துரைத்து அவர்கள் அனுமதி பெற்றுப் பெரும் பொருட் செலவில் நான்கு கோபுரங் களின் மீது ஒவ்வொரு நீலவிளக்குடன் இரண்டு வேறு விளக்கும் சேர்ந்து பிரகாசித்துக்கொண்டிருக்கவும், ஆலயத்துள் முக்கியமான சில இடங்களில் அதிக வெளிச்சமுள்ள விளக்குகள் மிளிரவும் செய்தார். அது முதல் தற்போது ஒவ்வொரு அன்பர்கள் தமது பெ யரால் ஒவ்வொரு விளக்காக அமைத்துக் கோவிலை மிகுந்த வெளிச்சமும், அழகும் உண்டாகும்படி செய் திருக்கின்றனர்.

ஆலயத்திருப்பணி:- இரண்யவன்மர் சிதம்பரத் திலே ஸ்ரீ நடராஜப்பெருமானுக்குப் பொன்னம்பலமும்

திருமூலட்டானேசுரருக்குத் திருக்கோவிலும், திருமாளிகைகளும், திருக்கோபுரங்களும், திருமதில்களும், செய்வித்தார் என்று புராணங்கூறுகிறது. அவருக்குப்பின் சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் பலரும் சிற்றரசர்களும் தனித்தனி அவ்வப்போது பல திருப்பணிகள் செய்திருப்பதாக வரலாற்று நூல்கள் கூறுகின்றன. பிற்காலத்தில் நாட்டுக்கோட்டை நகரதன வைசியர்களாகிய காருடுகாத்தான் வெ. சா. குடும்பத்தினர்கள் தங்களுடைய பெரும்பொருள் கொண்டும் அன்பர்களிடம் பெற்ற பொருள்கொண்டும் பர்மாவின் தலைநகராகிய இரங்கூனில் சிதம்பரம் நடராஜர் பேரால் கடை வைத்து அதற்கு அந்த விலாசமாகிய சித. ந. என்னும் பெயரையே வைத்துத் தொழில் நடத்தி அதன் வரும்படியாலும் மூலதனத்தினாலும் சிதம்பர சிவலாயத்திருப்பணியை நடத்தி வந்தனர். அப்போது சிதம்பரம் சிற்சபையைப் புதிய முறையில் அழகாகப் பொன்னினால் அமைத்துச் சாலிவாகனஞு 1813-க்குச் சரியரான கர ஆண்டு சித்திரைத்திங்கள் நான்காம் நாள் (15–4–1891) வெகு சிறப்பாகச் சில நூறுயிர ரூபாச்செலவில் கும்பாபிஷேகம் செய்தார்கள் என்று சொல்லப்படுகிறது. இஃது இற்றைக்குச் சற்றேறக்குறைய அறுபது ஆண்டுகள் ஆகின்றன.

அதன் பின்பு பல திருப்பணிகள் செய்து வந்து இடையில் சிலகாலம் நிறுத்தப்பட்டிருந்தபோதிலும், தடைப்பட்ட காரணங்களுக்கு வேண்டிய முயற்சிகள் செய்து, காலஞ் சென்ற இராஜா சர். அண்ணாமலை செட்டியாரவர்கள் தில்லைக் கோவிந்தராஜப் பெருமாள் கோவிலையும், அவ்வாலயத்திற்கு எதிரிலிருந்த பெரிய மண்டபத்தையும், அழகு பெற அமைத்துக் கும்பாபிஷேகம் செய்வித்தார்கள். தற்போது துவஜஸ்தமப

(கொடி மர)த்தின் முன் அமைக்க வேண்டிய மண்டப திருப்பணியும், திருமதில் பழுது பார்த்தலும் நிறைவேற வேண்டும்.

திருமதில் திருப்பணிச்சபை:- சிதம்பர சிவாலயத்தில் சேர, சோழ, பாண்டிய மன்னர்களால் திருப்பணிகள் பெரும்பான்மையும் முடிவு பெற்றிருந்தன. அப்போது வீரப்ப நாயகர் என்னும் சிற்றரசர் தாமும் திருப்பணி செய்ய எண்ணித் தமது பெயரால் பெரிய திருமதில் ஒன்று ஆலயத்தைச் சுற்றியமைத்தார். அது அவர் பெயரால் வீரப்ப நாயகர் திருமதில் என்று இன்றும் வழங்கப்பட்டு வருகிறது. இத்திருமதில் பல காலங் களில் ஏற்பட்ட கலகங்களின் போதெல்லாம் மக்கள் ஆலயத்திற்குள் வந்துவிடவும் அவர்களுக்கு ஒருவித ஆபத்தும் ஏற்படாதிருக்கவும் உதவியாயிருந்திருக் கிறது. இத்திருமதிலைச் சிவாலயத் திருப்பணியாளர் கள் யாது காரணத்தாலோ பழுது பார்க்கவில்லை. அது இப்போது மரங்கள் முளைத்துப் பலவிடங்களிலும் சரிந்து கேடுறும் நிலைமையில் இருக்கிறது. ஆதலின் பழுது பார்த்துப் புதுப்பித்துத் திருப்பணி செய்ய எண்ணி நகரவாசிகளிற் பலர் சேர்ந்து திருமதில் திருப் பணிச்சபை எனச் சில ஆண்டுகட்கு முன் ஓர் கழகம் தோற்றுவித்தனர். பல அன்பர்களிடமும் பொருளு தவிப் பெற்றுத் திருப்பணி செய்வதென்று முடிவு செய்து சபையைத் தோற்றுவித்துச் சட்டப்படி ரிஜிஸ்டர் செய்திருந்தும்கூட எக்காரணத்தினுலோ அப்பணியைத் தொடங்காமல் இருந்து வருகிறுர்கள். கூடிய விரைவில் இப்பணியைத் தொடங்கித் தாம் கொண்ட எண்ணத்தைச் சபையார் நிறைவேற்றுவார் களாக.

சமயப்பணி:- மாணிக்கவாசக சுவாமிகள் புத்தர்களை வாதில் வென்றது இங்கு என்று வரலாறு கூறுவதனாலும் இறைவன் திருக்கரத்தால் திருவாசகம் எழுதப்பட்ட காரணத்தாலும் அந்நினைவுக் குறியாகத் திருவாசக மண்டபம் என்னும் பெயரால் ஆலயத்துக்குள் ஓர் இடம் இருத்தல் வேண்டும். அவ்விடத்தில் திருவாசகம் வைத்துப் பூசிக்க ஏற்பாடு செய்வதுடன் திருவாசக விரிவுரை நிகழ்த்தவும் பாராயணம் செய்யவும் அந்த இடம் பயன்படல் வேண்டும் என்பது பல அன்பர்கள் கருத்தாகும்.

பாவாடை நிவேதனம்:- ஏராளமாக அன்னம் தயாரித்து நடராசர் சந்நிதியில் கனகசபையில் பரப்பாக அமைத்து நிவேதிப்பர். இதற்குப் பாவாடை என்று பெயர் வழங்குகிறார்கள். கனகசபை முழுவதற்கும் கீழே ஐந்து கருங்கற்களே பரப்பப்பட்டுள்ளன. தைப் பூசத்தன்று இந்த ஐந்து கற்களுக்கும் அறுபதுகல அரிசி அன்னம் தாயாரித்து பாவாடையிட்டு வந்தார்கள். தற்போது இவைகள் உணவுப்பங்கீடு காரணமாகக் குறைக்கப்பட்டும் நிறுத்தப்பட்டுமிருக்கின்றன.

# 2. பழைய வரலாறுகள்

---

## வியாக்கிரபாத முனிவர்

---

இவர் மத்தியந்த முனிவருடைய புதல்வர். தம் தந்தையாருபதேசத்தினால் எல்லாத்தலங்களிலும் சிறந்தது சிதம்பரம் என்றும், எல்லாச் சிவபுண்ணியங்களுள்ளும் சிறந்தது சிவலிங்க பூசை என்றும் அறிந்தார். அவைகளிலே அவருக்கு அவாப் பெருகியது. தந்தை

யாரிடம் அறிவித்து அவர் உடன்பாடு பெற்றுத், தில்லை வனம் அடைந்தார். அங்கே உள்ள சிவகெங்கையில் மூழ்கி, அதற்குத் தெற்கே ஓராலமர நிழலிலிருந்த திருமூலநாதரை வணங்கினார். நாடோறும் அத்தீர்த்தத்திலே முழுகித் திருமூலநாதருக்குப் பூசை செய்து கொண்டு வரும்போது, மேற்கே சற்று தூரத்தில் ஒரு குளம் கண்டு அருகே பர்ணசாலை அமைத்து வசித்து வந்தார். அப்போது அக்குளக்கரைக்கு மேற்கே ஒரு சிவலிங்கம் தாபித்து இரண்டு சிவலிங்கத்தையும் பூசித்து வந்தார்.

விடியுமுன் பூக்கொய்து பூசித்து வந்த இவர் இருளிலே பூ எடுக்க வழிதெரியாது துன்பப்பட்டார். பூக்களில் உள்ள பழுதும் புலப்படவில்லை. பூக்களை விடிந்தபின் எடுக்கலாமெனின் வண்டுதும், ஆதலின் இருவழியும் மனம் வருந்தித் தளரும்போது, இறைவன் காளையூர்திமேல் தோன்றி, அவருக்கருள் செய்து, அவர் விரும்பிய வண்ணம் மரங்களிலே வழுக்காமல் பற்றி ஏறுதற்கு வலிய நகப்பற்றுடைய புலிக்கால்களையும், புலிக்கைகளையும், வழிபார்த்து நடத்தற்கும், பழுது பார்த்தெடுத்தற்கும் அவைகளில் கண்கள் பொருந்தும் படியும் அருள்செய்து மறைந்தருளினர்.

இதனால் இவருக்கு வியாக்கிரபாத (புலிக்கால்) முனிவர் என்னும் பெயர் உண்டாயிற்று. இவர் நாடோறும் விடியுமுன் எழுந்து* நால்வகைப் பூக்களையும் கொண்டு முறைப்படி இறைவனை வழிபட்டு வந்தார்.

---

* நால்வகைப் பூக்களாவன:. கோட்டுப்பூ, கொடிப்பூ, நிலப்பூ. நீர்ப்பூ என்பவைகளாம்.

‡ புலீமடு என்னும் தீர்த்தத்தருகில், இவ்வாலயம் மத்தியந்தனேச்சுரம் என்னும் பெயருடன் விளங்குகிறது.

இவரது நிலைமையை நேரில் வந்து கண்ட தந்தையார் இவர் செயலுக்கு மகிழ்ந்தார். தாம் உடன் இருந்து, சிவகெங்கையில் மூழ்கி அவ்விரு சிவலிங்கங்களையும் வழி பட்டு வந்ததன்றித், தம பெயரால் இத்தலத்தின் தென்பாகத்தில் ஒரு சிவலிங்கம் தாபித்து வழிபட்டு வந்தார்.

வியாக்கிரபாத முனிவராகிய தம் புதல்வருக்கு வசிட்ட முனிவரின் தங்கையாரை மணஞ்செய்து வைக்க விரும்பினர். அவரும் அவ்வாறே அவரைத் திருமணம் செய்துகொண்டார். இவர்கள்பால் உபமன்னியு என்னும் நன்மகன் தோன்றினர். அக்குழந்தையை வசிட்ட முனிவரின் மனைவி அருந்ததி என்பார் தமதிருப்பிடம் கொண்டுபோய்க் காமதேனுவின் பாலை ஊட்டி வளர்த்து வந்தார். சில நாட்கள் சென்றபின் புலிக்கான் முனிவர், தம் புதல்வரைத்தம்மிடம் கொண்டுவரச் செய்தார். அப்போது தம்மிடமுள்ள கிழங்குகளையும், நீரிற்கரைத்த மாவையும் உணவாகக் கொடுத்தார். அக்குழந்தை காமதேனுவின் பாலையுண்டு வளர்ந்துவந்தது ஆதலின், அதனையே விரும்பி இவைகளை உண்ணாது உமிழ்ந்தது. புலிக்கால் முனிவரும் அப்புதல்வரைத் திருமூலநாதர் திருமுன்கிடத்தினர். அக்குழந்தை அழுது, இறைவன் திருவருளால் பாற்கடலைப் பெற்றுப் பருகிப் பசிதீர்ந்து வளர்ந்து வரலாயிற்று.

இவ்வுபமன்னிய முனிவர் கண்ணபிரானுக்குச் சிவ தீட்சை பண்ணிச் சிவபூசை எழுந்தருளச் செய்து கொடுத்த பெருஞ் சிறப்புடையவராவர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் வெள்ளை யானை மீதேறித் திருக்கைலை மலைக்குச் செல்லும்போது அம் மலைச்சாரலில் முனிபுங்கவர்கட்கு அருளுபதேசம் செய்துகொண்டிருந்த இம்

முனிவர் பெருமானுக்குச் சோதிவடிவம் தோன்றுதலும், திருவருள் வலத்தாலறிந்து, திக்கு நோக்கி வீழ்ந்து வணங்கினர். அருகிலிருந்த முனிவர்குழாம் முக்கண் இறையை யன்றி எப்பெருந் தேவரையும் தொழாத பெற்றியினராம் தேவரீர்! இன்று தொழும் செயற்குக் காரணம் யாதென்று வினவியது. உபமன்னிய முனிவர் சுந்தரமூர்த்தி சுவாமிகள் பெருமையையும், அவர் வரலாற்றையும், வெள்ளை யானைமீது ஏறிச்செல்லும் சிறப்பையும், திருத்தொண்டத் தொகை பாடியதையும், பிறவற்றையும் கூறினர். பின்னரும் அவர்கள் வேண்டு கோளுக்கிசைந்து, திருத்தொண்டத் தொகையி லுள்ள அடியார்கள் சரித்திரங்களையும் விரித்துக் கூறி னர் என்பது வரலாறு.

வியாக்கிரபாத முனிவர், திருமூலநாதருடைய பூசை முடித்துச் சிவயோகத்திலமர்ந்திருந்தபோது ஒருநாள் இறைவன் தாருகாவனத்தில் நாற்பத்தெண்ணாயிர முனி வர்கட்குத் திருக்கூத்தியற்றி யருள்புரிந்தமையை அறிந் தார். அதுமுதல் தாமும் திருநடனம் காண வேண்டு மென்னும் ஆசை மிகுதியுடையவரானர். தில்லைப் பதி யில் இறைவன் திருக்கூத்தியற்றுவர் என்பதை யுணர்ந்துகொண்டு அப்பதியிற்றனே நெடுங்கால மிருந்து இறைவனை விதிப்படி வழிபட்டுக்கொண்டு வந்தார்.

## பதஞ்சலி முனிவர்

---

பாம்புப் படுக்கையிலிருந்த திருமால், உறக்கம் விட் டெழுந்தார். தலையின்மீது கைகுவித்து, ஆனந்த அருவி பொழியச் சிவானந்த பரவசராய் இருந்தார். இவ்வாறு சிறிது நேரம் இருந்து பின் படுக்கையிலிருந்து எழுந்து

வேண்டுவ முடித்து அரியணையில் வீற்றிருக்கும்போது, அனந்தன் ஒருநாளும் இன்றி இன்று இவ்வாறு புதிய நிலை எய்தக் காரணம் யாதாகும் என அறியக் கருதித் திருமால் திருவடிகளிலே விழுந்து வணங்கினன். எம் பெருமானே! அடியேன்மீது பள்ளிகொள்ளாமல் இருப்பதற்குக் காரணம் என்ன? எனக் கேட்டான்.

அப்போது திருமாலானவர் கைலையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான், ஐயமேற்கும் கோலத்துடனும், தாம் ஓர் அரிவை வடிவத்தோடும் தாருகாவனம் சென்று, அவ்வனத்து இருந்த முனிவர்களின் உள்ளக் கிடையை மாற்றும் பொருட்டு நிகழ்த்திய செயல்களையும், இறைவன் அவர்களுக்கு அருள் புரியத் § திருக்கூத்தியற்றியதையும், நிருத்தானந்தத்தின் சிறப்பையும் கூறி அந்த நிருத்தானந்தத்தினலே நான் உன்மீது சயனித்து இருந்தும் இடையே உறக்கம் விட்டு அவ்வானந்தத்தில் ஈடுபடலானேன் என்று கூறினர்.

திருமால் கூறிய வார்த்தைகளைக் கேட்ட அனந்தன் அத்திருக்கூத்தைக் காணவேண்டும் என்னும் அவாவுடையவனாய், திருமாலிடம் உடன்பாடு பெற்றுத் திருக்கைலைமலைச்சாரலைச் சேர்ந்தான். இறைவனைக் குறித்து நெடுங்காலம் தவம் புரிந்தான். இறைவன் காளையூர்தி மீது வெளிப்பட்டார். அவன் தவத்திற்கு மகிழ்ந்து தழுவி அவன் தலைமீது திருக்கையை வைத்துத் திருவாய் மலர்ந்தருளுவாரானர்.

---

§ தாருகாவனத்திற்குச் சென்று இறைவன் திருக்கூத்தியற்றிய வரலாற்றை இந்நூலில் திருவுருவத் தோற்றத்திற்குக் காரணம் என்னும் தலைப்பின்கீழ்க் காண்க

நாம் இயற்றும் திருக்கூத்து ஐந்தொழிலேயாம். நாம் தாருகாவனத்திலே வெளிப்பட்டு நின்று திருக்கூத்தியற்றியபொழுது அவ்வனம் அதனைத் தாங்காது அசைந்தது. அதனால் உடனே திருக்கூத்தை நிறுத்திவிட்டோம். நீ விரும்பிய வண்ணம் இவ்வனத்திலே திருக்கூத்தியற்றின் இவ்வனமும் தாங்கவல்லதன்று. நமது திருக்கூத்தினைத் தாங்கவல்லது தில்லைவனமே. அவ்வனத்திலே மூலலிங்கம் இருக்கின்றது. அதனருகில் தெற்கின் கண் ஒரு சபையுமிருக்கின்றது. அதன் கண் எக்காலமும் திருக்கூத்தியற்றுவம்.

அச்சபை ஞானகாசமாகிய மெய்ப்பொருளா யிருத்தலால், மாயா காரியத் தன்மையையுடைய மற்றைப் பொருள்களோடுகூட அழியாது என்றும் நிலை பெறுவதாம். எண்ணில்லாத நல்ல புண்ணியங்களைச் செய்து ஞானக்கண்ணைப் பெற்றவர் இதனைக் காண்பர். காணப் பெறுதவர் பிறவியுட்பட்டுழலுவர். மிக்க ஒளியுடைய இவ்விழிகளுடனும் ஆயிரம் படங்களுடைய இவ்வடிவுடனும் ஆங்கு செல்லற்க. செல்லுவையேல் பூவுலகம் அஞ்சும். முன்னொரு காலத்திலே அத்திரிமுனிவரும் அவர் மனைவியாகிய அநசூயையும் உன்னைப் பிள்ளையாகப்பெறத் திருமாலை நோக்கித் தவம் புரிந்தார்கள். திருமால் உன்னை அவர்களுக்குப் பிள்ளையாகக் கொடுத்தார். அன்று நீ கருப்பையுற்றுப் பிறத்தற்கு அஞ்சி அவ்வநசூயை இருதுமதியாய் இருந்து நீராடித் தூய்மையாய்க் கரையேறியபொழுது, அவளுடைய கூப்பிய கரத்திலே, ஐந்துதலையுடைய ஒரு சிறுபாம்பு வடிவாக வரக்கண்டு, பயத்தினால் கையை விடுதலும் கீழே விழுந்து * பதஞ்சலி என்னும் பெயர் பெற்றாய். அவ்

* இரண்டு கைகளையும் சேர்த்துக் கூப்பின், அஞ்சலி எனப்படும். அஞ்சலியினின்றும் விழுந்தவர் பதஞ்சலி.

வுருவத்தோடும் அப்பெயரோடும் நாகலோகம் சென்று அங்கு காணப்படும் மலையினுக்குத் தென்பக்கத்தில் உள்ள பிலத்தின் வழியே செல்லுவையாயின் அப்பிலத் துவார முடிவிலுள்ள தில்லவனத்தை யடையலாம்.

அம்மலையின்முடி மூலலிங்கமாய் அத்தலத்திலிருக் கிறது. அவ்விலிங்கத்தைப் புலிக்கால் முனிவன் திருக் கூத்தைக்காண விரும்பிப் பூசித்துக்கொண் டிருக்கின் ருன்- நீயும் அங்கு சென்று பூசித்துக்கொண் டிருப்பா யாகில், தைப்பூசம் வியாழக்கிழமையோடு கூடும் சித்த யோகத் தினத்திலே உச்சிப்போதிலே அனைவரும் காணத் திருக்கூத்தியற்றுவோம் எனக் கூறி மறைந் தருளினர்.

அனந்தனும் வணங்கி நாகலோகம் சென்ருன் பாதலம் ஏழையும் ஊடுருவிநின்ற ஞானவடிவாம் அம் மலையின் தென்பாகத்தில் அமைந்த பிலத்தின் வழியே பூவுலகத்திற்கு வந்து தில்லவனத்தை யடைந்தான். ஆங்கமர்ந்த புலிக்கான் முனிவரைப் போற்றினுன். தன் வரலாற்றைக் கூறினுன். சிவகங்கையில் முழுகித், திரு மூலநாதரையும், திருப்புலிச்சுரமுடையாரையும் வழி பாடாற்றி வந்தான். சில நாட்கள் இவ்வாறிருக்கையில் இப்பதியின் மேற்றிசையில் § ஒரு குளம் கண்டு அதன் கீழ் கரையில் ஒரு சிவலிங்கம் தாபித்து மூன்று இலிங் கங்களையும் பூசித்துவரும் நாளில், இறைவன் திருக் கூத்தைக்காண எம்மருங்கிலுமுள்ள பலரும் புதிது புதிதாக வந்து அளவின்றிக் கூடினுர்கள்.

“......................
பூவாது பழுக்கும் சூலடிப்பனசம்
பார்கிழித் தோடிப் பணியுல களந்த

§ இக் குளம் நாகச்சேரி என்று பெயர் பெறும்.

வேர்தொறும் வேர்தொறும் வெவ்வேறு பழுத்து
முட்புறக்கனிக டுக்குவ தொட்ப மொடு
பதஞ்சலி முனிவனைப் பார்கொளத் தந்த
பிலங்கொளக் கொடுக்கும் பலங்கள்பல நிகர்க்கும்
மல்லலம் பொழில்சூழ் தில்லை வாண .....''

எனக் குமரகுருபர சுவாமிகள் சிதம்பரமும்மணிக் கோவையில் பதஞ்சலி முனிவர் பாதலமிருந்து பூதலம் வந்த வரலாற்றை அமைத்து அழகுபடுத்தி யுரைக்கும் பகுதி ஈண்டு கவனித்தற்குரியது.

## அம்பலத்து நட்டம்

புலிக்கால் முனிவரும், பதஞ்சலி முனிவரும் இவ்வாறு வழிபாடு செய்துகொண்டு நெடுங்காலம் இருந்து வந்தனர். அப்போது தைமாதத்திலே பூசநக்ஷத்திரமும் வியாழக்கிழமையும் சித்தயோகமும் கூடிவந்தது. அன்று உச்சிப்போதிலே திருவருள் நோக்கம் பெற்று யாவரும் தெரிசிக்க இறைவன் உமாதேவியாரோடு நின்று, ஆனந்த நிருத்தம் செய்தருளினார்.

அப்போது ஆயிரம் முகத்தையுடைய பானுகம்பர் ஆயிரம் சங்கூதினர். அஃது ஆயிரம் விதமாக வேதம் ஒலிப்பதுபோல இருந்தது. ஆயிரங்கைகளையுடைய வாணாசுரன், பல முகங்களையுடைய குடமுழா ஒலிப்பித்தார்: $ பஞ்சதுந்துபி ஒலியுடன் வேதவொலியும், கந்தருவருடைய கித ஒலியும் மிக்கெழுந்தன.

புலிக்கால் முனிவர், பதஞ்சலி முனிவர் என்னும் இருவரும், திருமால், பிரமன் முதலிய தேவர்களும், மூவாயிரம் தில்லைவாழந்தணர்களும், மற்றையரும் மெய்ம்

---

$ பஞ்சதுந்துபிகளாவன:- தோற்கருவி, துளைக்கருவி, நரப்புக்கருவி, கஞ்சக்கருவி, கண்டக்கருவி என்பனவாம்.

மயிர் சிலிர்ப்ப மனம் நெக்குருக, விழிகளினின்றும் ஆனந்த வருவிபொழிய நின்று, சிவபெருமான் உமா தேவியாரோடு நடிக்கின்ற ஆனந்த நடனத்தை அவன ருட் கண்ணாலே காட்டத் தரிசித்தார்கள்.

வலது திருக்கரத்திலே செங்கழுநீர் மலர் ஏந்தி நின்று, சிவகாமி யம்மையார் காணப் புயங்க நிருத்தம் செய்தபொழுது, புலிக்கால் முனிவரும், பதஞ்சலி முனி வரும், சிரசிலே குவித்த கைகளுடனே உரைதடுமாறிக் கண்களின்றும் ஆனந்த அருவிபொழிய சிவானந்தப் பெருங்கடலின்கண் மிதந்தார்கள் எனின், எஞ்சிய வேத புருடன், திருமால், பிரமன் முதலிய தேவர்கள் செயலைச் சொல்லவும் வேண்டுமோ?

பதஞ்சலிமுனிவர் "இந்த ஞானசபையிலே சிவகாமி யம்மையாரோடு இன்றுமுதல் எந்தக்காலமும் ஆன்மாக் களுக்கு ஆனந்த நிருத்தத்தைப்புலப்படுத்தியருளும்" என்று வேண்டிக்கொண்டனர். அவர் வேண்டு கோட்குச் சிவபெருமான் உடன்பட்டருளினர். இறை வன் ஆணைப்படி அந்த நிருத்தத்தானத்தைத் தேவர்கள் பொன்னினாலே அமைத்தார்கள்.

தேவர்களும், பிறரும் திருநிருத்த தெரிசனம்செய்து கொண்டிருக்கும்போது, பிரமதேவர் கங்கைக் கரையிலே யுள்ள † அந்தர் வேதியிலே, யாகம் செய்தனர். அப் போது நாரத முனிவரைத் தேவர்களையும், திருவுடை யந்தணர்களையும் அழைத்து வரும்பொருட்டனுப்ப, அவர் வந்துரைத்தலும் அவர்கள் ஆனந்த நிருத்த மாகிய அமிர்தத்தை உண்ணும் நாங்கள் யாகத்தின்

---

† அந்தர்வேதியாவது:- கங்கைக்கும் யமுனைக்கும நடுவேயுள்ள தேசம். அந்தர் - நடு. வேதி - சமபூமி.

அவியை விரும்பவில்லை என மறுத்தனர். அதனை யுணர்ந்து பிரமதேவர் தாமே நேரில்வந்து, புலிக்கால் முனிவருக்கறிவித்து, அவர் வாயிலாக அவர்க்கு எடுத்துக்கூறச் செய்து, உடன்படுத்தி அழைத்துச் சென்று யாகத்தை முற்றுவித்துக்கொண்டார் என்னும் சரித்திரப் பகுதி, வேறோரிடத்தில் சுருக்கமாக எழுதப் பட்டிருக்கிறது.

## இரணியவன்மர்

சிங்கம்போல் வெண்ணிறமுடையவராய்த் தோன்றிய காரணத்தால் சிம்மவன்மர் என்னும் பெயர் பெற்றார். இவருக்குச் சுவேதவன்மர் என்று மற்றொரு பெயரும் உண்டு. இவர் தில்லைப்பதியில் இறைவனருளால் சிவகெங்கையில் மூழ்கியவுடன், பொன்னிற உடல் பெற்ற வரலாறு இப்பகுதியில் பின்னர்க் கூறப்படும். பொன்னிற உடல் பெற்றபின் இரணியவன்மர் என்னும் பெயரால் வழங்கிவரலாயினர்.

இவர் இமயமலைக்குத் தெற்கேயுள்ள கௌடதேயத்திலே இருந்து பூவுலகை ஆண்டுவந்த ஐந்தாவது மனுவின் முதல் மனைவியிடத்துப் பிறந்தவராவர். ஐந்தாவது மனுவுக்கு முன்னிருந்த நான்குமனுக்களும், தனித் தனியே ஒவ்வொருவரும் எழுபத்தொருசதுர்யுகம் அரசியற்றி யிருந்து பினகாலஞ் சென்றனர் என்று சொல்லப் படுகிறது.

பிரமாண்டம் படைக்கப்பட்டபொழுது, சூரியனுக்குக் குமாரர்களாகத் தோன்றியவர் இருவர். அவர்கள் மனு, இயமன் என்பவர்களாம். பூமியிலே,

வெளிப்படப் பாவம் செய்தவர்களைத் தண்டிக்க மனுவை யும், வெளிப்படாமல் மறைவாகப் பாவஞ் செய்தவர் களைத் தண்டிக்க இயமனையும் சிவபெருமான் நியமித்தார்.

அம்மனுக்களின் வழிவந்த இவ்வைந்தாவது மனு வின் இரண்டாவது மனைவி, வேதவன்மன், சுமதிவன் மன் என்னும் இரண்டு நன் மக்களைப் பெற்ருள். முதல் மனைவியின் புதல்வரான சிம்மவன்மன், தம் உடலிலே உள்ள குற்றத்தை உணர்ந்தார். அரசியற்று வதற்குத் தம்பியரிருத்தலின் நாம் பூவுலகெங்குமுள்ள திருப்பதிகள்தோறும் சென்று சிவதீர்த்தமாடி வழிபாடு செய்வதே முறை என்று உள்ளத்துட் கொண்டார். தந்தையாரிடம் தெரிவித்து உடன்பாடுபெற்ருர். கௌட தேயத்தைவிட்டு நீங்கிக் காசியை அடைந்தார். கங்கை யில் முழுகி விசுவநாதரை வணங்கிஞர். வங்கம், சாவக முதலிய தேயங்களைக் கடந்து ஒட்டிய தேசத்துக்குவந்து அங்குள்ள பிமநாதரையும், தெலுங்க தேயத்திலுள்ள திருப்பருப்பத நாதரையும், திருக்காளத்தி நாதரையும் வழிபட்டுக்கொண்டு வரும்போது, அங்குவந்த வேடன் பால் அக்காட்டின் புதுமைகளை எல்லாம் வினவுதலும் அவ்வேடன்;

“இக்காட்டிலே மாமரத்தின் கிழ் இருக்கும் தேவர் ஒருவருக்கு, அருகிலுள்ள பிலத்துவாரத்தின் வழியே பச்சைநிறப் பெண் வந்து ஒவ்வொரு நாளும், இரண்டு பொழுதிலும் பூச்சொரிகின்ருள்” என்ருன். அவன் வழி காட்டிவரப் பின்சென்று, மாவடியின் கிழ் வைகும் திரு வேகம்பநாதரை வழிபட்டுக்கொண்டு அவ்வேடன் மூலம் பழம் மாவகைகள் முதலிய உணவு வகைகளைப் பெற்று உண்டு இருக்கும் நாளிலே, பின்னும் பல தலங்கள் வழி பட்டுவர எண்ணங்கொண்டு அவ்வேடனை முன்னே

சென்று வழிகள் தெரிந்துவர அனுப்பியபோது, அவ் வேடன் பல இடங்கள் சென்று வழிபார்த்து வந்தான். தெற்கே தில்லைக்காடு ஒன்றிருக்கிறது. அங்குள்ள குளத்தின் கரையிலே, புலிவடிவோடு ஒருவன் பெரிதும் உறங்கிக்கொண்டிருக்கக் கண்டேன். பயந்து திரும்பி விட்டேன். என்று கூறக்கேட்ட சிங்கவன்மர், அவ் வேடன் வழிகாட்டிவர, அவனோடு புறப்பட்டுத் தில்லைக் காட்டிற்கு வந்து சேர்ந்தார். தீர்த்தக் கரையிலே சிவ யோக சமாதியில் வீற்றிருந்த புலிக்கால் முனிவரை வழி பட்டு நின்றார்.

வழிபட்டு நிற்கும் சிங்கவன்மரது இயல்புகளனைத் தையும், மற்றவற்றையும், யோகநிலையிலேயே உணர்ந்த முனிவர் யோகத்தினீங்கிச் சிங்கவன்மரை விளிக்க மீண்டும் வணங்கிய சிங்கவன்மரை அருகிலிருத்தி அவர் வந்தவரலாறு முற்றும்வினவினர். சிங்கவன்மரும் மிகப்பணிவோடு, நான் கௌடதேயமனுவின் குமார னுவேன். உமதருள் பெற்றுச் சிவபெருமானை நோக்கித் தவமுயல வந்தேனெனலும், முனிவர் உன்பிதா தளர் பருவத்தனுதலின், இனி நீ அரசாளுவதற்குச் செல்ல வேண்டும், நீ தவஞ்செய்ய எண்ணுவது தகாது'' என் றுரைத்தார்.

சிங்கவன்மர் தம வடிவம் அரசாளுவதற்குத் தகுதி யற்றதென்றும், மேலும் தம்பியரிருத்தலின் அரசாட்சி யை அவர்கள் நடத்துவார்கள் என்றும், ஆதலினல் தாம் முத்திபெறுவதற்கு ஆசையுடனிருத் தலின் அருள்செய்யவேண்டுமெனவும் வேண்டிக்கொண் டார். புலிக்கால்முனிவர், தன் உடற்குற்றம காரணமாக அரசியற்றுவதில் வெறுப்புடையவனு யிருக்கின்றுன. அது நீங்கினல் அரசாளுவன். நடராசப் பெருமானு

டைய திருவருள்பெறின் அதுநீங்கப்பெறுவன். இத்த லத்தில் நடைபெறவேண்டிய ஆலயத்திருப்பணிகள் இவனால் செவ்விதின் முடிவு பெறும், என்றுகருதினர். பதஞ்சலிமுனிவருக்கு இதனைத்தெரிவித்தார். அவர் கருத்தும் அதுவேயாதலும், நடராசப்பெருமான் சந்நிதியில் இவ்விபரம் தெரிவித்து இவனுக்குத் திருநடனம் காட்டியருளவேண்டுமென வேண்டிக்கொண்டார். ஆனந்தநடேசர் பணித்தபடியே சிங்கவன்மனைச் சிவகங்கையிலே மூழ்குவித்தார்கள். மூழ்கி எழுந்தசிங்கவன்மர் முன்னைவடிவம் நீங்கிப் பொன்வடிவம் பெற்று இரணியவன்மர் என்று பெயர்பெற்றார். புலிக்கால்முனிவர் இரணியவன்மருக்குத் திருவைந்தெழுத்தை உபதேசித்து அம்பலவாணர் திருமுன் அழைத்துச்சென்று திருநிருத்தம் தெரிசிப்பிக்கச் செய்தார்.

இரணியவன்மரும் நெஞ்சம் நெக்குருகக் கண்ணீர் வார, மெய்ம்மயிர்சிலிர்ப்ப அழுது தொழுதார். இறைவன் அருள்புரிந்து, "இவ்விருமுனிவருக்கும் திருவுடையந்தணர்கட்கும் பணிசெய்க"என கட்டளையிட்டார்.

புலிக்கால் முனிவர், பின்பு திருப்புலிச்சுரத்திலும், திருவனந்தேச்சுரத்திலும் இறைவழி பாடாற்றச் செய்து தம் இருப்பிடத்திற்கு அழைத்து வந்தார். தம்மனைவியாரிடம் உபமன்னியுவுக்குப்பின் நீ பெறாது பெற்ற பிள்ளை இஃது என்று காட்டுதலும், அவரும் தம்மைத் தாயென்று வணங்கிய இரணியவன்மரைக் கிடைத்தற்கரிய செல்வம் எனக்கொண்டார்.

இரணியவன்மர் திருநிருத்த தெரிசனம்செய்து கொண்டு இறைவன் ஆணைப்படி இருமுனிவர்களுக்கும், தில்லை மூவாயிரவருக்கும் தொண்டு செய்துகொண்டி

ருக்கும்போது கௌடதேச அரசராகிய மனு, சுவர்க்கம் அடைந்தார். அப்போது வசிட்ட முனிவரிடம் தம் மூத்த புதல்வனாகிய சிங்கவன்மரைக்கொண்டு அரசியலை நடத்துவிக்க வேண்டுமென விண்ணப்பித்துக் கொண்டார். ஆதலினால் வசிட்ட முனிவர் அம்மனு வுக்குச் செய்யவேண்டும் கிரியைகளனைத்தையும் இளைய புதல்வர்களைக்கொண்டு செய்வித்து விட்டுத் தென்றிசை நோக்கிச் சென்று தில்லைவனத்திற்கு வந்தார். தில்லை வனத்திற்கு வடமேற்றிசையில் திருக்களாமர நிழலில் எழுந்தருளியிருந்த பிரமபுரீசரை வணங்கினார். இஃதறிந்த புலிக்கால் முனிவர், தாம் பூசை முடித்து வருவதாகச் சொல்லி முன்னே இரணியவன்மரை அனுப்பினார்.

முன்பு சென்ற இரணியவன்மர், வசிட்ட முனிவரை வணங்கினார். தம் பிதா சுவர்க்கமடைந்த செய்தியை அவராலறிந்து வருத்த முற்றார். பின்பு வந்த புலிக்கால் முனிவரும, பதஞ்சலி முனிவரும், வசிட்ட முனிவரும் ஒருவரோடொருவர் மிக்க அன்புடையராய் அளவளா வினார்கள. இரணியவன்மருடைய துக்கத்தை ஒரு வாறு தேற்றினர். வியாக்கிரபாத முனிவர், வசிட்ட முனிவரை அழைத்துக்கொண்டு போய்ச் சிவகங்கை யிலே மூழ்குவித்து, நடேசப்பெருமானையும், மற்ற எல்லா மூர்த்திகளையும் வணங்கச் செய்து, தமதாச்சிரமத்திலே அவருக்கு விருந்து செய்வித்தார். அவருடைய விருந்தினராயிருக்கும்போது ஒரு நாள் இரணியவன் மரை அவர் தந்தையார் அரசாட்சி செய்யும்படி செய்ய வேண்டுமெனக் கூறியதையும், அது குறித்தே இப்போது வந்திருக்கும் விவரத்தையும் தெரிவித்தார். புலிக்கால் முனிவர் வாயிலாக இதையறிந்த இரணிய வன்மர், சிற்சபேசருக்கும் தங்களுக்கும் பணி செய்தலே

பேறு ஆதலின் அரசாட்சி முதலிய எப்பேற்றிலும் விருப்பமில்லை என்பதை மிக வணக்கத்துடன் தெரிவித்தார்.

புலிக்கால் முனிவர் உன் கருத்து இதுவாயின் நீ வசிட்ட முனிவருடன் சென்று, அரசாட்சியுடன் எல்லாப் பொருள்களையும் கொண்டு வருவாயாக; வரும்போது பிரமாவின் யாகத்தின் பொருட்டு இவ்விடமிருந்து சென்ற தில்லை மூவாயிரவரையும் அந்தர்வேதியிலிருந்து அழைத்துக் கொண்டு வருதல்வேண்டும் எனப் பணித்தார். இரணியவன்மரும் அனைவரையும் வணங்கி விடை பெற்றுக்கொண்டு கௌடதேசத்தை அடைந்தார், சிலகாலம் அங்கிருந்து வந்தார். பின்பு தம்பியர், மந்திரிமார் முதலானவர்களுடன் புறப்பட்டு, அந்தர் வேதியை அடைந்தார். அங்கு தில்லை வாழ் அந்தணர்கள் இருக்கக்கண்டு அவர்களை வணங்கித் தேர்களின் மீதேற்றிக்கொண்டு தில்லைவனத்தின் எல்லையிலே வந்தார். அத்திருத்தேர்களை அவ்விடத்தே நிறுத்தி விட்டுத் தாம் முன்னே வந்து முனிவரிருவருக்கும் நிகழ்ந்தவைகளையறிவித்தார், அவர்கள் விரைந்து சென்று திருவுடையந்தணர்களை எதிர்கொண்டார்கள்.

கனகசபைக்கு வடமேற்கிலே திருவுடையந்தணர்கள் ஏறிவந்த தேர்கள் நிறுத்தப்பட்டிருந்தன. புலிக்கால் முனிவருக்கும், பதஞ்சலி முனிவருக்கும் தங்களை எண்ணிக்காட்டிக் கொண்டனர். அப்போது மூவாயிரவர் தொகையிலே ஒருவர் குறைதலும், இரணியவன்மர் திகைத்து நின்றனர். அப்போது சிவபெருமான் எல்லோருக்கும் கேட்கும்படி "நாம் இவர்களுள் ஒருவர், இவ்வந்தணர்களெல்லோரும் நம்மை ஒப்பர்; நாம்

இவர்களை ஒப்பேம்" என்றருளிச் செய்தார். உடனே அது கேட்ட அனைவரும் இறைவன் றிருவருளை நினைந்து அஞ்சித் துதித்தார்கள். தேவர்கள் பூமாரிபொழிந்தனர்.

இரணியவன்மர் தில்லைப்பதியின் கீழ்பால் ஒரு நகரம் உண்டாக்குவித்து அங்கு இருந்து வந்தார். அதனாலே அவ்விடத்திற்குக் கொற்றவன்குடி என்று பெயர். அஃது இக்காலத்துக் கொத்தன்குடி என மருவி வழங்கலாயிற்று.

திருநிருத்தம் சேவித்து வாழும் நாள்களிலே ஒரு நாள் பெருந்திருக்கூட்டமாக யாவரும் கனகசபை யருகே இருந்தார்கள். அபபோது புலிக்கால் முனிவா இப் பூமியை இரணியவன்மரும், கௌடதேயத்தை அவன் தம்பியரும ஆளக்கடவர் என்று கூறுதலும், மற்ற முனிவர் முதலிய அனைவரும் அவ்வாறே ஆகுக என்று உடன் பட்டனர். புலிக்கால் முனிவர் இரணியவனமனுருக்குத் திருமணம் செய்வித்து, முடி சூட்டிப், புலிக்கொடி கொடுத்துச் சோழராசா வாக்கினர். அவர் தம்பியரிருவரும் அனைவரிடமும விடை பெற்றுக் கொண்டு கௌடதேசம் சென்று அரசாட்சி செய்து வந்தனர். இரணியவன்மனுர், தாம் தில்லையிலேயிருநது அரசாட்சி செய்து வரும் காலத்திலே, தில்லைப்பதியிலே செய்யவேண்டிய ஆலயத் திருப்பணிகள் அனைத்தையும செவ்வனே முற்றுப் பெறச்செய்தார். திருவிதியிலே தில்லைவாழந்தணர்கட்குத் திருமாளிகைகள் அமைத்துக் குடி புகுவித்தார். ஆலய பூசைக்கெனப் பதஞ்சலி முனிவரைக்கொண்டு வேதசிவாகமப்படி பூசாபத்ததி ஒன்று செய்வித்தார். நித்திய பூசை, திருவிழாக்கள் முதலியன எல்லாம் விதிப்படி நடக்கும்படி செய்து வாழ்ந்து வந்தார்.

## 3. சிதம்பர சிவாலய தரிசனமுறை

கதிரவன் தோன்றுவதற்கு முன் எழுந்து, நித்தியகருமமுடித்துத் தூய்மையுடையராய்த் திருநீறு முதலிய சிவசின்னங்களணிந்துகொண்டு, மனவுருக்கத்துடன் இறைவனைத் தியானித்துத் திருவீதி வலமாக வருதல் வேண்டும். இயலாதோர் நான்குகோபுரங்களையும் தரிசித்து வீதிவலம் வந்ததாக மனதிலே பாவித்துக்கொண்டு கீழைக்கோபுரவழியே ஆலயத்துட்செல்லுதல் வேண்டும. செல்லும்போது அக்கோபுரவாயிலில் இரு மருங்கிலும் விளங்கும விநாயகபெருமானையும், முருகக்கடவுளையும், வழிபாடு செய்துகொள்ளுதல் வேண்டும். உள்ளே உள்ள பெரிய பிரகாரத்தை வலம் வருதல் வேண்டும்.

தெற்குக்கோபுரத்திற்கு நேரேவரும்போது ஸ்ரீநடராஜரின் சந்நிதி எதிர்ப்படுவதால் அங்குநின்று வணங்குவதுடன் அவ்விடத்தில் சிறுஆலயத்தில் உள்ள விநாயகர் தக்ஷிணாமூர்த்திகளையும் வணங்குதல்வேண்டும்.

### முக்குறுணி விநாயகர்

தெற்குக்கோபுர வாயிலிலிருந்து மேற்கே செல்லும்போது நிருதிமூலையில் அமைந்துள்ள கிழக்குமுகமான ஆலயத்தில் முக்குறுணி விநாயகர் மிகப்பெரிய தோற்றத்தோடு மிக அழகாக விளங்குகின்றார். விநாயகராலயத்தில் செய்யும் வழக்கப்படி சிரசிலே முட்டியாகப்பிடித்த கையினால் குட்டிக்கொள்க. மும்முறை தாழ்ந்தெழுந்து முறைப்படி மற்ற வணக்கங்களும் ஆலயவலமும் செய்க. அவ்விநாயகராலயத்தில் சுவாமி திருமுன்பாகத் தேங்காய்களை நிலத்திலே சிதறும்படி அடித்து வணங்குவர். ஆயிரக்கணக்கில் தேங்காய்கள் பிரார்த்தனை செய்து கொண்டு உடைப்பதுண்டு. இதுமிக்க வரப்பிரசாதமான மூர்த்தியாகும்.

முக்குறுணி அரிசியால் ஒரேமோதகம் செய்து நிவேதிக்கும் வழக்கம் காரணமாக இப்பிள்ளையாருக்கு இப்பெயர் வந்திருக்கிறது. மதுரையில் இன்றும் முக்குறுணி அரிசியை ஒரே மோதகமாகச்செய்து நிவேதிக்கின்றனர். முக்குறுணி என்பது பட்டணம் ஆறுபடி அளவினதாகும்.

## கற்பக விநாயகர்

முக்குறுணி விநாயகர் ஆலயத்திலிருந்து புறப்பட்டு வடக்கே செல்லும்போது மேற்குக்கோபுரம் காணப்பெறும். மேலைக்கோபுரத்துள் நுழைந்து அக்கோபுரத்தில் மேற்குமுகமாக விளங்கும் ஸ்ரீகற்பகவிநாயகராலயத்தில் மூர்த்தியை முன்கூறிய முறையை யொட்டி வழிபாடு செய்துகொள்ளுதல்வேண்டும் இக்கற்பக விநாயகர் தலவிநாயகராகும். இம்மூர்த்திக்கு ஏழு திருக்கைகள் உள்ளன. தேவர்கள் பூசித்ததாக ஐதிகம் கூறுவர். அதற்கொப்பத்தேவர்கள் சூழவிளங்குகின்றனர். இவ்வாலயத்திலும் சிதறுதேங்காய் உடைப்பார்கள். இம்மூர்த்திக்கு வெள்ளியினுல் கவசம் ஒன்று சிதம்பரம் ஈசானியமடத்திலிருக்கும் பழநிசாமி சுவாமிகளால் அன்பர்கள் பொருளுதவிகொண்டு செய்யப்பட்டிருக்கிறது.

## வில்வமரம்

இக்கற்பக விநாயகராலயத்திற்கு மேற்கே வில்வமரம் ஒன்று உண்டு. கற்பக விநாயகராலயமும் அம்மூர்த்தியும் மேலைக்கோபுரத்துடன் இணைப்பாக விளங்குவதால் இவ்வாலயத்தை வலம்வருதல் இயலாது. இவ்வில்வமரத்தை வலம் வருவதால் கற்பகவிநாயகரை வலம் வருவதற்கு ஒப்பாகும் என்று சொல்லி

இதனையே வலம் வருவர். இஃது உமாபதி சிவாச்சாரிய சுவாமிகளால் வைக்கப்பட்டதென்று சொல்லுகிருர்கள்.

## குமரகோவில்

மேலைக்கோபுரத்தில் கிழக்கு முகமாக விளங்கும் ஆலயம். இவ்வாலயமும் மேலைக்கோபுரத்துடன் இணைப்புடையதேயாம். இதில் வள்ளி தெய்வயானை அம்மை சமேதராக குமாரக் கடவுள் விளங்குகின்ருர். அருணகிரிநாத சுவாமிகள் " ஆரத்தோடணி " என்னும் தலைப்புள்ள திருப்புகழில் " புலியூரினில் மேலைக்கோபுர வாசலில் மேவிய பெருமாளே " என்று இப்பெருமானைத் துதித்துள்ளார்கள்.

நவவிரர்கள்:- விரவாகுதேவர் முதலிய நவவிரர் கட்கும், நாரதர் முதலியவர்கட்கும், இவ்வாலயத்துள் இடம் வகுத்துப் பிரதிட்டை செய்யப்பட்டிருக்கிறது. கந்தர்சட்டியில் இவ்வாலயத்தில் நடைபெறும் சூர சம்மார உற்சவம் சிதம்பர வாசிகளாகிய செங்குந்த மரபினரால் செய்யப்பெற்று வருகிறது.

இவ்வாலயத் திருப்பணி:— இவ்வாலயம் மிகப்பழுதா யிருப்பதை உணர்ந்த அன்பர்கள் சிலர் திருப்பணி செய்ய உத்தேசித்துத் தொடங்கியுள்ளனர். இத்திருப் பணியைப் பொதுமக்களின் பொருளுதவிகொண்டே செய்ய முன்வந்திருப்பதால், அன்பர்கள் பொருளுதவி புரிந்தும் வருகிருர்கள். இவ்வாலயத்தைச் சிறப்புற அமைப்பதற்குப் பெரும் பொருள் தேவை. ஆதலினுல் சிவநேயச்செல்வர்கள். தாமே முன் வந்து தம்மாலான வுதவிசெய்து முற்றுப் பெறச் செய்விப்பது நலம்.

## மீனாக்ஷி சுந்தரேசுரர்

குமரகோவிலிலிருந்து வலம் வரும்போது சிவ கங்கைக்கு அருகில் உள்ள ஆலயம். இதில் ஸ்ரீ சொக்க லிங்கப்பெருமானும் அங்கயற்கணம்மையும் எழுந்தருளி யிருக்கிறார்கள்.

## சிவகங்கை

இத்தீர்த்தமகிமை சிதம்பரத்திலுள்ள தீர்த்தங்கள் என்னும் பகுதியில் விளக்கப்பட்டிருப்பதால் அங்கு காண்க இதில் ஆசமனம் முதலியவை செய்து சிரமீது புரோக்ஷித்துக் கொள்க. நாற்புறமும் படிகட்டுகள் கட்டப்பட்டிருப்பினும், மூன்று இடங்களில் இறங்குதற்கு வழியும் பெரிய மண்டபமும் உள்ளன.

## ஒற்றைக்கால் மண்டபம்

சிவகங்கையின் மேற்புறத்துப் படித்துறை வழியே வெளிவரும்போது, நேரே விளங்கும் சிறு ஆலயமாகும். இதனுள் விநாயகர் திருவுருவம் காணப்படும். தெரிசித்துக்கொள்க. இவ்வாலயத்தில் ஒற்றைத்தூண்வைத்துக் கட்டப்பட்டிருப்பதால் இப்பெயர் வந்தது. மற்றவூரிலுள்ளவர்கள் சிதம்பரம் சென்றுவருபவர்களை ஒற்றைக் கால் மண்டபம் பார்த்தீர்களா? என்று வியப்புடன் இன்றும் வினவுவதுண்டு ஆதலால் இதனைக்கருத்தூன்றிப்பார்த்தல் வேண்டும்.

## நூற்றுக்கால் மண்டபம்

ஒற்றைக்கால்மண்டப ஆலயத்துக்குப் பின்புறம் உள்ளமண்டபம் இங்கு மூர்த்திவழிபாடுகள்செய்வதில்லை. ஆதலால் போக்குவரவின்றி மூடப்பட்டு இருக்கிறது.

## சிவகாமியம்மைகோயில்

இஃது ஒற்றைக்கால் மண்டப விநாயகராலயத்தி லிருந்து சிவகங்கையையும் வலமாகச் சுற்றிவரும்போது சிவகங்கைக்கு மேற்கே விளங்கும் ஆலயமாகும். மிகப் பெரிய இரண்டு பிரகாரங்களுடன் அழகாகத் திருப்பணி செய்யப் பெற்றிருக்கிறது. நின்ற திருக்கோலமாக மிகப் பெரிய வடிவோடு விளங்கும் இம்மூர்த்தி மனதை ஒரு முகமாகச் செய்யும் வனப்புடையதாகும். திருமூலநாதர் உமையபார்வதி எனவும், ஸ்ரீ நடராசர் சிவகாமி எனவும் தனித்தனி அம்மையிருக்க மற்றோர் அம்மை (பராசக்தி)யின் ஆலயம் தனியே விளங்குகிறது. இதனை இரகசியமாகிய அருவத்திருமேனி கொண்டுள்ள இறைவனுக்குரிய சக்தி எனக்கொள்ளுவது சால்புடையதாகும் என்ப.

**தங்கக்கவசம்:-** சிவகாமி அம்மைக்காகச்சில ஆண்டுகட்குமுன், பெரும் பொருட் செலவில் பொன்னினால் ஒரு கவசம் செய்து ஓர் அம்மையினால் கொடுக்கப் பட்டிருக்கிறது. அதனை விசேஷ காலங்கள் சிலவற்றிலும் சில முக்கிய திருநாட்களிலும் அணிவித்துத் தெரிசிக்கச் செய்கிறார்கள்.

**நித்திய பூசை:-** காலையில் இரண்டு காலமும், மாலையில் இரண்டு காலமுமாக நான்கு காலப்பூசை நடைபெறும்.

**திருவிழா:-** ஐப்பசி மாதத்துப் பூரத்தைத்தீர்த்த விழாவாகக்கொண்ட பத்து நாள் திருவிழாக் கொடியேற்றம் முதலாகத் தொடங்கி நடைபெறும். அப்போது அம்மைக்குத் திருக்கல்யாண உற்சவமும் நடக்கும்.

இஃதன்றி நவராத்திரிவிழா முதலிய விழாக்களும் உண்டு. இங்குள்ள கொடி மரம் பொன்னினுல் மெருகிடப் பட்டிருக்கிறது.

## சித்திரகுப்தர்

சிவகாமியம்மை ஆலய இரண்டாம் பிரகாரத்து தென்கிழக்கு மூலேயில் சித்ரகுப்தருக்கு மேற்குமுகமாக ஆலயம் இருக்கிறது. சித்திரை மாதத்து பௌர்ணிமை திதியில் விசேட பூசையாதியவைகள் செய்கிருர்கள். இயமதருமனுக்கு இவரை எழுத்தாளர் என்று சொல்லுவர்.

## மகிஷாசுரமர்த்தனி

சிவகாமியம்மை யாலயத்திருவாயிலின் வடபுறத்தில் வடக்கு முகமாக விளங்கும் ஆலயத்தில் மகிஷாசுர மர்த்தினியின் திருவுருவம் காட்சியளிக்கிறது. வெள்ளிக் கிழமை முதலிய விசேஷ நாட்களில் அதிகமான அர்ச்சனையாதியவை நடைபெறுகின்றன. இதனேத் துர்க்கை கோவில் என்றும் சொல்லுவர்.

**முன்மண்டபம்:-** ஆலயம் மிகச்சிறியது. வழிபடுவோர் உள்ளே செல்ல இயலாது. ஆதலின் மழை முதலிய தொந்தரவுகள் இன்றி வழிபாடு செய்ய முன்னே ஒரு மண்டபம் சில அன்பர்கள் முயற்சியினுல் பொதுமக்கள் உதவி கொண்டு அமைக்கப்பட்டிருக்கிறது.

## பாண்டியநாயகர் கோவில்

துர்க்கை கோயிலுக்கு வடக்கே கிழக்கு முகமாக இருக்கிறது. இங்குள்ள ஆறுமுகக் கடவுள் மிகப்பெரிய திருவுருவத்தோடு மயில்வாகனத்தின் மீது வள்ளி, தெய்வயானே சமேதராகக் காட்சியளிக்கின்ருர். இவ்

வாலயம் ஓர் மருங்கு தனித்து விளங்குவதாயினும் அன்பர்கள் வந்து வழிபாடு செய்தவண்ணமாகவே இருக்கின்றனர்.

திருவிழா:- பங்குனி யுத்திர நாளைப் பத்தாம் நாளாகக்கொண்டு கொடியேற்ற முதலாகப் பத்து நாள் திருவிழா நடைபெற்று வருகிறது. மாதந்தோறும் வரும் கார்த்திகையில் விசேஷ அபிஷேக அலங்காரங்கள் செய்வதுடன், இரவு சுவாமி எழுந்தருளச் செய்கிறார்கள்.

ஆலய அமைப்பு:- யானைபூட்டி இழுக்கப்படும் இரதம் போன்று தோற்றம் அமையத் தேருருளையும் யானையும் அமைக்கப்பட்டிருக்கிறது.

திருப்பணி:- இவ்வாலயத்தைச் சிதம்பரம் நடராஜ் விலாஸ் ஜுவல்லரி மார்ட், திரு. செ. ரெத்தினசாமி செட்டியார் அவர்கள் பெரும் பொருள் கொண்டும் பல அன்பர்கள் நன்கொடைப் பொருள் கொண்டும் பழுது நீக்கிப் புதுப்பித்துள்ளனர். மிகச்சிறப்பாகக் கும்பாபிஷேகம் நடந்தது.

சிறந்த ஓவியங்கள்:- புதுக்கித் திருப்பணி செய்த போது சிறந்த ஓவியக்காரரைக்கொண்டு கந்தபுராண வரலாற்றைக் கற்றாரும் மற்றாரும் கண்டு மகிழும் வண்ணம், அழகிய தோற்றத்துடன் விளங்கும் உருவங்கள் அமைய எழுதச் செய்திருக்கும் செயல் போற்றுதற்குரியதாம்.

## வடக்குக் கோபுரம் ஆறுமுகக் கடவுள்

வடக்குக்கோபுரத்தில் தெற்குமுகமான ஆலயத்தில் ஆறுமுகசுவாமி தேவியாரோடு இருக்கின்றனர். யமதருமன் உருவமும், மார்க்கண்ட முனிவரால் பூசிக்கப்

பட்ட ஒரு சிவலிங்கமும், விநாயகர் முதலிய வேறு மூர்த்திகளும் உண்டு.

திருப்பரங்குன்றத்தில் தெய்வயானை திருமண முடித்துத் திருக்கைலைக்கு எழுந்தருளியபோது இத்தலம் வந்து தங்கியதாகக் கூறப்படுகிறது. இங்கு தெய்வயானையம்மை மட்டுமே இருத்தலினால் அது சாலப் பொருத்தமே.

## நவலிங்கங் கோவில்

பாண்டிய நாயக சுப்பிரமணிய சுவாமிக்குக் கீழ்புறம் விளங்கும் புதிய ஆலயம் பழய இவ்வாலயம் இடிந்து போய் இருந்த இடம் கல்மேடாகிக் கிடந்தபடியால் அவைகளை அப்புறப்படுத்தியதன்றி, மௌனத்துடன் துறவு பூண்டிருந்த பெரியார் ஒருவர் பல அன்பர்களிடம் பொருள் பெற்று அவ்வாலயத்தைப் புதிதாக அமைத்துள்ளனர்.

இவ்வாலயத்தில் சூரியன் முதலிய ஒன்பது கிரகங்களினால் பூசிக்கப்பெற்ற ஒன்பது சிவலிங்கங்கள் இருக்கின்றன. காலை மாலை இரண்டு வேளைகளிலும் காலம் தவறாது பூசைகள் நடக்கின்றன. கோள்களினால் வரும் தீமைகள் நீங்க இவ்வாலயத்திலுள்ள மூர்த்திகட்கு அபிஷேகமாதியவைகள் செய்து வழிபடுவார்கள்.

## ஆயிரக்கால் மண்டபம்

நவலிங்கங் கோவிலுக்கும் சிவகங்கை தீர்த்தத்துக்கும் கிழக்கே விளங்கும் மிகப் பெரிய மண்டபமாம். இம்மண்டபம் ஆயிரங்கால்களோடு அமைக்கப்பட்டிருப்பதால் இப்பெயரால் வழங்கப்படுவதாயிற்று. ஒவ்வோராண்டிலும் வரும் ஆனி மாதத்திலும் மார்கழி மாதத்திலும் நடைபெறுகின்ற திருவிழாக்களில்

ஒன்பதாம் நாள் ஸ்ரீ நடராசப் பெருமான் திருத்தேர் மீதேறித் திருவீதி வலம் வந்து, அன்று இரவு இந்த ஆயிரக்கால் மண்டபத்துக்கு எழுந்தருளி இங்குநடக்கும் விசேஷ அபிஷேக ஆராதனைகளை ஏற்றுப் பத்தாம் திரு நாளாகிய தெரிசனத்தன்று அன்பர்கட்குக் காட்சி யளித்து வரும் தெரிசனம் என்னும விழா நடைபெறும் இடமாகும். நடராசப் பெருமான் திருவீதிக்கெழுந் தருளும் இரதோற்சவமும், தெரிசனமுமே உற்சவங் களில் சிறந்த நாட்களாம்.

எல்லாத்தலங்களிலும் ஆயிரக்கால் மண்டபங்கள் இல்லை. மதுரை, திருவண்ணாமலை முதலிய இரண்டு, மூன்று தலங்களில்மட்டுமே இருப்பதாகத் தெரிகிறது. சில தலங்களில் ஆயிரக்கால் மண்டபங்கள் உளவேனும் இஃது அவைகளினும் சிறந்த முறையில் பல்லாயிரக் கணக்கான மக்கள் ஒரே காலத்தில் இருந்து தெரிசனம் செய்யும்படி மிக விசாலமும், வெளிச்சமும், காற்றோட்ட மும் உள்ளதாய் உள்ளத்தில் கவர்ச்சி உண்டாக்கும் நிலை மையில் விளங்குகின்றது.

சிதம்பரம் சிவாலயத்தில் உள்ள ஐந்து சபைகளுள் இஃது ஐந்தாவது சபையாகும். இதன் பெயர் இராச சபை என்பதாகும்.

### இதன் உண்மைக் கருத்து

மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநா கதம், விசுத்தி, ஆஞ்ஞை என்பன ஆறு ஆதார கமலங் களாம். இவ்வாறுதார கமலங்களுக்கு இதழ்களாவன.

(1) மூலாதாரத்துக்கு 4. — (4) அநாகதத்திற்கு 12.
(2) சுவாதிட்டானத்துக்கு 6. — (5) விசுத்திக்கு 16.
(3) மணிபூரகத்துக்கு 10. — (6) ஆஞ்ஞைக்கு 2.

இவ்வாறுதார கமலங்களையும் கடந்து நெற்றியின் மீது

ஆயிர இதழ்களோடு கூடிய கமலத்தின் மீது சோதி வடிவமாகிய சிவத்தைத் தெரிசிக்கும் முறையை இது குறிப்பிக்கும். ஆயிரங்கால்களோடு கூடிய மண்டபம் ஆயிரம் இதழ்களோடு கூடிய கமலத்தைக் குறிக்கிறது.

மனிதர்களுக்கு உத்தராயணம், தக்ஷிணுயனம் இரண்டும் கூடிய ஓராண்டு, தேவர்கட்கு ஒரு நாள். ஆகையால் தக்ஷிணுயனத்தின் முடிவாகிய மார்கழிமாத தெரிசனம் காலை வழிபாட்டையும், உத்தராயணத்தின் முடிவாகிய ஆனிமாத தெரிசனம் மாலை வழிபாட்டையும் குறிப்பதாகும்.

இதயதாமரையில் உள்ள இறைவனை நெற்றியின் மீதுள்ள ஆயிர இதழ்க் கமலத்தில் இருத்தி இரண்டு காலங்களிலும் வழிபாடியாற்றுவதையே, சிற்சபையிலுள்ள இறைவனை ஆனி, மார்கழி இரண்டு மாதங்களிலும் ஆயிரக்கால் மண்டபத்துக்கு எழுந்தருளச் செய்து வழிபட்டுத் தெரிசிக்கும் செய்கையானது உணர்த்துகின்றது.

இதனை

இரண்டோ டிரண்டு மூவிரண்டை யிரண்டா
றிரண்டு மீமிசை யெண்
ணிரண்டோ டிரண்டு கொண்டிருந்த இதழ்ப்பங்
கயங்கள் கடந்து போய்
இருந்த குளத்தின் மேலோரா யிரந்தோட்ட்
அமல கமல மிசை
இருந்த சோதி தனைக்கண்டெம் எண்ண
முடிப்பேம் என எழுந்து

என்னும் பிரபுலிங்கலீலைச் செய்யுளானும் அறியலாம்.

## புருஷாமிருகம்

ஆயிரக்கால் மண்டபமாகிய இராசசபையைத் தெரிசித்துக்கொண்டு தெற்கேவரின் கோயிலுக்குள்ளே போவதற்குரிய வாயிலே அடையலாம். கிழக்கே உள்ள இவ்வாயிலன்றி மேற்கே ஒருவாயிலும் உண்டு. அவ் வாயிலாலும் மக்கள் போவது வருவது உண்டு. சுவாமி திருவீதிக்கு எழுந்தருளுவது இவ்வாயிலினூலேயாம். இவ்வாயிலின்கண் இருபத்தொரு படிகள் மிக ஆகல மானதாகவும், பெரியதாகவும், வசதியுள்ளதாகவும் இருக்கின்றன. இவ்வாயிலில் நுழைந்தவுடன் வட பக்கத்துக்குட் வறையிலே புருஷாமிருகம் என்று ஓர் உருவம் காணப்படுகிறது. அதனைத் தெரிசித்துக் கொண்டால் தம்மையறியாமல் சார்ந்துள்ள தூய்மை யின்மைகளும் குற்றங்களும் நீங்கி விடும் புனிதம் பெறுவர். ஆலயத்துள் செல்லுவோர் தூய்மை பெறுவதற்கு இதனைத் தெரிசித்துக்கொண்டு செல்ல வேண்டும்.

## ஊர்த்துவதாண்டவ மூர்த்தி

இம்மூர்த்தி எழுந்தருளியிருக்கும் ஆலயம் நிருத்த சபை என்று சொல்லப்படும். இது சிதம்பராலயத்தி லுள்ள மூன்ருவது சபையாம். இறைவன் காளியோடு நடனம் செய்தபோது ஒரு சமயம் இவ்வாறு வலது பாதத்தைச் சிரமீது தூக்கியபடி நிருத்தஞ்செய்ததாக்ச் சொல்லப்படுகிறது. இதிலுள்ள தூண்கள் மிகுந்த நுண்ணிய ஓவிய வேலைப்பாடுகளமைந்து விளங்கு கின்றன. உருளைகள் பலவுடைய இரதத்தைக் குதிரை பூட்டி இழுக்கும் பான்மையாக இவ்வாலயம் அமைக்கப் பட்டிருக்கிறது.

சரபமூர்த்தி:- நரசிம்மாவதாரங்கொண்ட திருமாலின் கருவத்தைப் பங்கஞ்செய்யும் பொருட்டுத் திருவுருவங் கொண்ட சரபமூர்த்தி இவ்வாலயத்தின்கணிருக்கின்றது. சரபம் என்பது ஒரு பறவை எனவும் அது சிம்மத்தையும் கொல்லும் ஆற்றலுடையதெனவும் கூறுப. திருநாளைப் போவார் என்னும் நந்தனார் திருவுருவம் ஒன்றும் இவ்வாலயத்தில் உண்டு.

இவ்வாலயம், நடராஜப்பெருமான் சந்நதியில் இருக்கும் கொடிமரத்தின் அருகில் இருக்கிறது. கொடிமரத்தினருகு நின்று நேரே நடராசப் பெருமானையும் தெரிசித்துக்கொள்க.

## தண்டபாணி

கொடிமரத்திற்கு மேற்கே ஒரு தூணில் அமைந்து விளங்குகின்றது. கலியுக வரதராக விளங்கும் இவர்க்குப் பிரார்த்தனை செய்துகொண்டு காவடியெடுத்து அபிஷேக முதலியவை செய்து வழிபட்டு வருகிறார்கள். தைப்பூசம் அக்னி நட்சத்திர நிவர்த்தி முதலிய விசேஷ காலங்களில் அதிகக்காவடிகள் எடுப்பதுண்டு.

குறிப்பு:- இவ்வாலயத்தின் முன்னர் அமைக்கப் பட்டிருந்த கருங்கல் மண்டபம் சுமார் இருபதாண்டுகட்கு முன் திருமால் ஆலய உரிமையாளர்களால் தொடுக்கப்பட்ட விவகாரங் காரணமாக அப்புறப்படுத்தப்பட்டதெனத் தெரிய வருகிறது. கொடிமரத்தின் முன்னர் அமைக்கவேண்டிய எட்டுச்சிங்கங்கள் அமைந்த தூண்களில் நாட்டப்பட்டவை இரண்டு நீங்கலாக மேலும் இரண்டு தூண்கள் நாட்டப்பட்டுத் திருப்பணி நிறைவேற வேண்டியிருக்கிறது.

திருமுறைகாட்டியவிநாயகர்:- (ஆகாசப்பிள்ளையார்) தண்டபாணி சந்நிதியிலிருந்து மேற்கே பிரகாரமாக வரும்போது மேலைவாயிற்படிக்கு நேரே மண்டபத்துச் சியில் சிறு வடிவினராக விளங்கும் பிள்ளையாருக்குத் திருமுறைகாட்டிய விநாயகர் என்றுபெயர். இம்மூர்த்தி யிருக்கும் இடத்திற்குச்செல்ல ஏணிப்படி அமைத்திரு க்கிறார்கள். அம்மூர்த்தியிருக்கும் இடத்திற்குக் கீழே விநாயகர் சிவலிங்கம் முதலிய மூர்த்திகளிருக்கின்றன. தேவாரத்திருமுறைகள் இருந்த இடத்தைத் தெரிவித் தபடியால் இப்பிள்ளையாருக்கு இப்பெயர் வந்தது.

திருமுறைமண்டபம்:- திருமுறைகாட்டிய விநாயக ருக்கு அருகே ஓர் அறையில் தேவாரத்திருமுறைகள் வைக்கப்பட்டிருந்து அபயகுலசேகர சோழமகாராஜா வானவர் நம்பியாண்டார் நம்பிகளைக்கொண்டு எடுக்கச் செய்ததாக அறிகிறோம். அதற்கேற்ற அடையாளங் களைத் திருப்பணிசெய்து ஆலயம் புதுப்பித்த காலத் துச்செய்யாது விட்டுவிட்டபடியால் அவைகள் வழக் காற்றிலிலவாகின்றன. ஆதலின் இனியேனும் சைவ சமயாபிமானிகள் அந்நினைவு யாவருக்கும் உண்டாம் வண்ணம், சைவத் திருமுறைகட்குச் சிறு ஆலயம் ஒன்றெடுப்பிக்கச் செய்து அதில் சைவத் திருமுறைகளை வைத்துப் பூசிக்கவும், சைவத் திருமுறைப் பாராயணம் செய்யவும் ஏற்பாடு செய்வது மிகச்சிறந்த புண்ணியமாம்.

## சைவசமயாச்சாரியர் நால்வர்

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் முதலான சைவசமயாசாரியர் நால்வருக்கும் இப்பிரகாரத்து வட மேற்கு மூலையில் ஆலயம் இருக்கிறது. அங்கு தேவார பாடசாலை மாணவர்கள், மாலை வேளைகளில் தேவார பாராயணம் செய்கின்றனர்.

## வாகன மண்டபம்

இவ்வாலயத்தின் அருகே வடபகுதியில் வாகனங்கட்கு இடம் வகுக்கப்பட்டுப் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருக்கின்றன. அவைகளுள் பொன்னினாலும் வெள்ளியினாலும் செய்யப்பட்டவை பெரும்பாலானவை.

## வல்லபை விநாயகர்

திருமூலநாதர் சந்நிதிக்குச் செல்லும்போது, அவ்வாலயத்தின் தெற்கே இரண்டுவிநாயகர்உண்டு; வணக்கம் செய்துகொள்க.

## திருமூலநாதர்

இவ்விலிங்கமே சிதம்பரத்துக்குத்தலஇலிங்கமாகும் இது சுயம்புமூர்த்தி. பாதாளத்திலுள்ள ஒருமலையின் கொழுந்தே திருமூலட்டானேசுரர். சிதம்பரத்தில் நடராஜப்பெருமான் திருநடன தெரிசனத்தின் பொருட்டு வியாக்கிரபாத முனிவரும் பதஞ்சலிமுனிவரும் இப்பெருமானை வழிபட்டு வந்தார்கள் என்பது புராணவரலாறு. இவ்வாலயம் கிழக்குமுகமானது. ஆலமரநிழலில் இவ்விலிங்கமிருந்ததாகச் சொல்லப்படும்.

உமயபார்வதியம்மை:- இங்கு தேவியாலயம் தெற்கு முகமாக விளங்குகின்றது. அம்மைதிருநாமம் உமையபார்வதியம்மை என்பதாம்.

## பல்லீசர்

வல்லபைவிநாயகருக்கும் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கும் நடுவில் உள்ள இறைவன்றிருவுருவம். இது சிறிய திருவுருவமேயாயினும், பல்லியின்உருவமும் இருக்கிறது. பல்லிவிழுதல் முதலியவற்றால் வரும்தோஷங்களின்

நிக்கத்திற்கு இவ்விறைவருக்கு அபிஷேகமுதலிய செய்து வழிபாடாற்றுவது வழக்கம்.

## தக்ஷிணாமூர்த்தி

திருக்கைலேயில் சநகாதி நால்வர்களுக்கு உபதேசித்த காட்சியை எடுத்துக்காட்டும் திருக்கோலத்தில் மூர்த்தி மிக்கஅழகிய தோற்றத்தோடு காட்சியளிக்கிறார். வெள்ளிக்கவசம் இம்மூர்த்திக்குச் செய்து வைத்திருக்கிறார்கள். திரு ஐந்தெழுத்தை இம்மூர்த்தி சந்நிதானத்தில் இயன்ற உருச்செபிக்க.

## அறுபத்துமூவர்

திருமூலநாதர் ஆலயத்தை வலம்வரும்போது பிரகாரத்தில் வடக்கேஉள்ள அறுபத்து மூவரையும், கீழ்பாகத்திலுள்ள இலிங்கமாகிய அருணாசலேசுரரையும் தெரிசித்துப்பின் சண்டேஸ்வரரையும் தரிசிக்க வேண்டும்.

## தேவசபை

மேலும் வலமாக வந்து, தேவசபை என்னும் பேரம்பலத்தையும் அங்குள்ள மூர்த்திகளையும் அருகிலுள்ள சனீசுவரன், நவக்கிரகங்கள் முதலிய சந்நிதிகளையும் வழிபாடு செய்துகொள்க. தேவசபை என்னும் இதுவும் ஐந்து சபைகளுள் ஒன்றாகும். இங்கு தில்லை மூவாயிரவர் ஒன்று கூடிப் பொதுவாக இருந்து மேல் நிகழ்வுபற்றி ஆலோசித்து முடிவுசெய்வர். நடராசப் பெருமானிடம் இருந்து ஒரு தீபத்தைக் கொண்டு வந்து வைத்து பொதுக்கூட்டம் நடத்துகையில் நடராசப் பெருமானும் உடனிருப்பதாகவும்; அவர் முன்னிலை

யிலே அக்கூட்டம் நடத்துவதாகவும் பாவித்து எக்காரியத்தையும் கலந்து முடிவு செய்வார்கள்.

இவ்வாலயத்துள்; தக்க முறையில் ஆபரணங்கள் முதலிய எல்லாப் பொருள்களையும் பாதுகாப்பாக வைத்துப்பரிபாலனஞ்செய்து வரப்படுகிறது.

தேவசபைஎன்னும் பேரம்பலத்திலிருந்து தென் முகமாகச்சென்று நடராசர் சந்நிதியிலுள்ள துவசஸ்தம்பமென்னும் பொன்மயமான கொடிமரத்தையும் வலமாகவந்து திருச்சந்நிதியிலுள்ள திருவாயிலைக் கடந்து உள்ளேவரும்போது நடராசமூர்த்தி திருவுருவமும் இரண்டுசபைகளும் காணலாம். அச்சபைகளுள் ஒன்று பொன்னினலும் மற்றொன்று செம்பினலும் உள்ளவை.

பொன்னினற் செய்யப்பெற்று மிக்க ஒளியோடு விளங்குவது சிற்சபையாம். அதற்குமுன் விளங்குவது கனகசபையாம். இவ்வாறு (1) சிற்சபை (2) கனகசபை (3) நிருத்தசபை (4) தேவசபை (5) இராஜசபை எனறு ஐந்து சபைகள் சிதம்பரத்திலுள்ளன.

இஃதன்றிவெவ்வேறு தலங்களிலுள்ள நான்கு சபைகளுடன் தில்லையம்பலத்தையும் சேர்த்து ஐந்து சபை கூறும் வழக்கமும் உண்டு.

அவையாவன:- (1) பொன்னம்பலம் இது சிதம்பரம், (2) வெள்ளியம்பலம் இதுமதுரை, (3) இரத்தின அம்பலம் இது திருவாலங்காடு, (4) தாமிர அம்பலம், இது திருநெல்வேலி, (5) சித்திர அம்பலம் இது திருக்குற்றலம், என்பனவாம். நடராசர் சந்நிதியின் முன்பார்வையில் பெரும்பொருட்செலவில் பொன்னினல் அழகிய விமானம் அமைத்து அதனுள் நடராஜர்திருவுருவம்

ஒன்று அம்மையோடு விளங்கும்படியமைத்தவர் சிதம்பரம் பொன்வெள்ளி வியாபாரம் S. R. ரத்தினசாமிச் செட்டியாரவர்களாவார்கள்.

விநாயகராலயம்:- கனகசபை அடுத்துள்ள பிரகாரத்தை வலமாக வரும்போது முதலில் மேற்றிசையில் விளங்கும் சிறு ஆலயம். இதில் கற்பகவிநாயகர் உருவு போல எழுதிருக்கரங்களுடனும் பிற அமைப்புக்களுடனும் விளங்கும் மூர்த்தியை வழிபடவேண்டும்.

இலிங்கோற்பவர்:- விநாயகராலயத்துக்கருகில் இலிங்கோற்பவர் என்னும் மூர்த்தி ஒரு அறை போன்ற ஆலயத்துள் இருக்கிறது. சோதி வடிவாயெழுந்த இறைவனைத் திருமாலும் பிரமதேவரும், பன்றியும், அன்னமுமாய்த் தேடிய சரிதமொப்ப விளங்கும் திருவுருவமாகும். இவ்வுருவை ஏனைத்தலங்களில் கருப்பக்கிரகத்தின் பின்புறத்தில் காணலாம்.

முருகக்கடவுள்:- இப்பிரகாரத்தின் வடமேற்கு மூலையில் கிழக்கு முகமான ஆலயத்தில் ஆறுமுகத்துடன் வள்ளிதெய்வானையம்மை சமேதராய் விளங்குகின்றனர்.

பள்ளியறை:- அந்தஇடத்தின் அருகிலே உள்ள தெற்குமுகமான ஆலயம் கருங்கல்லினால் நன்கு இழைப்புவேலை செய்த அரியதிருப்பணியுடன் விளங்குகின்றது. அர்த்தயாமபூசை முடிந்தபின் சுவாமியை இங்கு எழுந்தருளச்செய்வர்.

## ஆகாய இலிங்கம்

பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் என்பவற்றிற்கு முறையே திருவாரூர் திருவானைக்கா திருவண்ணாமலை

திருக்காளத்தி சிதம்பரம் என்னுமிவைகள் திருத்தலங்களாம். ஆகாசபூதத்துக்குரிய தலமாதலின் அதற்கேற்ப சிற்சபைக்குப் பின்புறமாக உள்ள திருமாளிகைப் பத்தி மண்டபத்தின்மேல்தளத்தில் உள்ள ஆலயத்தில் ஆகாசலிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. ஆகாசலிங்கத்தையும் நவசத்தி சொரூபமான சிற்சபையின் மீதுவிளங்கும் ஒன்பது பொற்கலசங்களையும் தெரிசித்துக்கொள்க.

## பிக்ஷாடன மூர்த்தி

பரமானந்த கூபத்துக்கு வடக்கே தெற்குமுகமான ஆலயத்தில் பிக்ஷாடனமூர்த்தி திருவுருவம் பெரியதாகவும் அழகியதாகவும் விளங்குகின்றது.

**பைரவர்:-** இத்தலத்தில் பைரவருக்கு விசேஷம் சொல்லுவதுண்டு. பிக்ஷாட்னர் ஆலயத்தருகில் உள்ள மேற்குமுகமான ஆலயம் இது. திருப்பணிசெய்வதற்கு முன் சண்டேசுரர் ஆலயத்தை ஒட்டி அதன்கீழ்ப்பகுதியில் இருந்ததாகவும் வசதி கருதி யிங்கு அமைத்ததாகவும் சொல்லுகிறுர்கள்.

**சூரியசந்திரர்:-** பைரவர் ஆலயத்தருகில் சூரியர் சந்திரர் இருவரும் விளங்குகின்றனர்.

## தேவாரம்பாடிய மூவர்முதலிகள்

தேவாரம்பாடிய மூவருக்குத் தில்லைக்கோவிந்தராஜப்பெருமாள் ஆலயத்துக்கெதிரிலுள்ள மண்டபத்தின் தென்பாகத்தில் வடக்குமுகமான ஆலயம் ஒன்று இருந்தது ஏறக்குறைய இருபதுஆண்டுகளுக்கு முன் அம்மண்டபம் புதிதாகக் கட்டப்பட்டபோது அம்மூர்த்

திகள் மூவரையும் சூரிய சந்திரர் இருக்குமிடத்துக்கருகில் வடக்குமுகமாகப் பிரதிட்டைசெய்தார்கள். இஃதன்றிப்புதிதாகத் திருப்பணி செய்த காலத்தில் பல மூர்த்திகளை முன்பிருந்தபடியின்றி மாற்றி வெவ்வேறிடங்களில் அமைத்திருக்கிறார்கள். திருமூலநாதர் சந்நிதியில் சுற்றிலுமிருந்த சிவலிங்கம் முதலிய மூர்த்திகளை அவ்வாலயத்தின் மேற்கே வரிசையாக வைத்திருப்பதாகச் சொல்லப்படுகிறது.

## கனகசபைமேவிய பெருமாள்

அருணகிரிநாதர்பாடிய திருப்புகழில் "கனகசபை மேவும் எனதுகுருநாத' என்றும் கனகசபை மருவு கந்தப் பெருமாளே என்றும் பல விடங்களில் பாடப்பட்ட கனகசபைமுருகர் அருகிலுள்ள வேறு மூர்த்திகள் என்றே இப்போது முடிவு செய்கின்றனர்.

திருப்பணி செய்தகாலத்துக்குமுன், கனகசபையில் இப்போது பூசைக்காரர் இருக்கும் இடத்துக்கு அருகில் மேல்புறம் இருந்தசுவரில்; ஒருமாடத்துக்குள் அம்முருகன் இருந்ததாகவும், அதுதான் அருணகிரிநாதர் பாடல் பெற்றதென்றும், அப்போது திருப்பணிநடந்தகாலத்தில் பேரம்பலத்தில் கொண்டுபோய்ப் பிரதிஷ்டை செய்தனர் என்றும், வயது முதிர்ந்த அநுபவமுள்ளவர்கள் வாயிலாகத் தெரியவருகிறது. தற்போதும் அது பேரம்பலத்தினுள்தான் இருக்கவேண்டும்.

கனகசபையிலே, சிற்சபையின் தென்குறட்டில் பதஞ்சலி வியாக்கிரபாத முனிவர் திருவுருவங்கட்கு மேல் உள்ள துவார பாலகர்கட்கு, டிண்டி, முண்டி, என்றும் தெற்குக் கோபுரத்தில் தெற்குமுகமாக விளங்கும் துவாரபாலகர்களுக்கு ஆட்கொண்டான்.

ஐயாக்கொண்டான் என்றும் பெயர் சொல்லுகிருர்கள். சிற்சபைக்குள்ளே உள்ள பிரகாரம் பிரணவப் பிரகாரம் என்று சொல்லப்படும்.

## சிற்சபை நிர்மாண விளக்கம்.

சித்—ஞானம், சபை—மன்றம், என்பதுபொருள்.

பஞ்சாக்ஷரப்படிகள்.

ஞானவடிவமாகிய இந்தச் சபைக்குச்செல்லுதற்குப் படிகளாய் அமைந்தவை மந்திரமாகிய ஐந்தெழுத்துக் களுமே. இவ்வைந்து படிகட்கும் பஞ்சாக்ஷரப்படி என்று பெயர். இவைகள் வெள்ளித் தகட்டிஞல் அழகாகப் போர்த்தப்பட்டு விளங்குகின்றன.

இதன் இருமருங்கும் யானைத் துதிக்கைபோல வளைவாக அமைக்கப்பட்டிருப்பதைத் திருக்களிற்றுப் படி என்பர்.

## ஐந்து பீடங்கள்

பிரமா, விட்டுணு, உருத்திரன், மகேசுவரன், சதா சிவன் இவ்வைவரும் பஞ்சமூர்த்திகளெனப்படுவர். இந்தச் சபையில் இவ்வைவரும் ஐந்து பீடங்களாக உள்ளனர்.

சதாசிவ பீடத்தின்கண் வேதங்கள் நான்கும் பொன் மயமான நான்கு தம்பங்களாக விளங்குகின்றன. வேதங் களாவன ருக், யசுர், சாமம், அதர்வம் என்னும் நான்கு மாம்.

உருத்ரபீடத்தின்கண் வேதங்கள் ஆறும் பொன் மயமான ஆறு தம்பங்களாக விளங்குகின்றன. வேதங்

களாவன சிக்ஷை, வியாகரணம், சந்தசு, நிருத்தம், சோதிடம், கற்பம் என்னும் ஆறுமாம்.

விட்டுணு பீடத்தின்கண் பூதங்கள் ஐந்தும் ஐந்து தம்பங்களாக விளங்குகின்றன. பூதங்களாவன: பிருதிவி அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் ஐந்துமாம்.

பிரமபீடத்தில் இருபத்தெட்டு ஆகமங்களும் இருபத்தெட்டுத்தம்பங்களாக விளங்குகின்றன ஆகமங்களாவன: காமிகம், யோகஜம், காரணம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகச்சிரம், அஞ்சுமான், சுப்பிரபேதம், விசயம், நிச்சுவாசம், சுவாயம்புவம், ஆக்னேயம், வீரம், ரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகவிம்பம், பூரோற்கிதம், லளிதம், சித்தம், சந்தானம், சர்வோக்தம், பாரமேசுரம், கிரணம், வாதுளம் என்னும் இருபத்தெட்டும் சைவாகமங்களாம்.

## பலகணிகள்

சிற்சபையின் தென்குறட்டில் அமைந்துள்ள பலகணிகள் ஒவ்வொன்றிலும் தொண்ணூற்ருறு துவாரங்கள் இருக்கின்றன. அவைகள் தொண்ணூற்ருறு தத்துவங்களாம். தத்துவம் தொண்ணூற்ருறுவன:—

பூதம் ஐந்து:- பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்பனவாம். இவை முறையே மண், நீர், நெருப்பு, காற்று, வெளி எனப்படும்.

பொறி ஐந்து:— மெய், வாய், கண், மூக்கு, செவி என்பனவாம்.

புலன் ஐந்து :— சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பனவாம்.

கன்மேந்திரியம் ஐந்து :— வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் என்பனவாம். இவை முறையே வாய், கால், கை, அபானம், குறி இவைகளைக் குறிக்கும்.

கன்மவிஷயம் ஐந்து :— வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம் என்பனவாம். இவை முறையே பேசுதல். நடத்தல், கொடுத்தல், விடுதல், மகிழ்தல் எனப்படும்.

கரணம் நான்கு :— மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்பனவாம். அறிவு ஒன்று.

நாடிகள் பத்து :— இடை, பிங்கலை, சுழுமுனை. சிங்குவை, புருடன், காந்தாரி, அத்தி, அலம்புடை, சங்கினி, குகு என்பனவாம்.

வாயுக்கள் பத்து :— பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன் என்பனவாம்.

சமயம் ஐந்து :— அமர்வாசயம், பகிர்வாசயம் சலவாசயம், மலவாசயம், சுக்கிலவாசயம் என்பனவாம்.

கோசம் ஐந்து :— அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம், ஆனந்தமயகோசம் என்பனவாம்.

ஆதாரம் ஆறு :— மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்கினை என்பனவாம்.

மண்டலம மூன்று :— அக்கினி மண்டலம், ஆதித்த மண்டலம், சந்திர மண்டலம் என்பனவாம்.

மலம் மூன்று :—'ஆணவம், கன்மம், மாயை என்பன வாம்.

தோஷம் மூன்று :— வாதம், பித்தம், சிலேத்துமம் என்பனவாம்.

எட்ணை மூன்று :— அர்த்தவேட்ணை, புத்திர வேட்ணை, உலகேடணை என்பனவாம்.

குணம் மூன்று :— இராசதம், தாமதம், சாத்விகம், என்பனவாம்.

இராகம் எட்டு :— காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம், இடும்பை, அகங்காரம் என்பனவாம்.

அவஸ்தை ஐந்து :— சாக்கிரம், சொப்பனம். சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்பனவாம்.

ஆகத் தத்துவங்கள் தொண்ணூற்றாறு. இவைகளை மற்றொருவிதமாகச் சில மாற்றியும் சொல்லுவதுண்டு. அதன் விபரங்களை மற்றைய நூல்களால் அறியலாம்.

## மேலேயுள்ள கைமரங்கள்

இனிமேலே அறுபத்து நான்கு கலை ஞானங்களும் அறுபத்து நான்கு கைமரங்களாக விளங்குகின்றன. அறுபத்து நான்கு கலைகளாவன :— அக்கர விலக்கணம், இலிகிதம், கணிதம், வேதம், புராணம், வியாகரணம், நீதிசாத்திரம், சோதிட சாத்திரம், தரும

சாத்திரம், யோக சாத்திரம், மந்திர சாத்திரம், சகுன சாத்திரம், சிற்ப சாத்திரம், வைத்திய சாத்திரம், உருவ சாத்திரம், இதிகாசம், காவியம், அலங்காரம், மதுர பாடனம், நாடகம், நிருத்தம், சத்தப்பிரமம், வீணை, வேணு, மிருதங்கம், தாளம், அத்திரபரீட்சை, கனக பரீட்சை, இத பரீட்சை, சுக பரீட்சை, அசுவ பரீட்சை, இரத்தின பரீட்சை, பூமி பரீட்சை, சங்கிராம இலக்கணம் மல்யுத்தம், ஆகருஷணம், உச்சாடணம்,வித்துவேடணம், மதன சாத்திரம், மோகனம், வசீகரணம், இரசவாதம், காந்தருவவாதம், பைபீலவாதம், கவுத்துவாதம், தாது வாதம், காருடம், நட்டம், முட்டி, ஆகாயப்பிரவேசம், ஆகாயகமனம், பரகாயப்பிரவேசம், அதிரிசயம், இந்திர சாலம், மகேந்திரசாலம், அக்கினித்தம்பம், சலத்தம்பம், வாயுத்தம்பம்,திட்டித்தம்பம், வாக்குத்தம்பம், சுக்கிலத் தம்பம், கன்னத்தம்பம், கட்கத்தம்பம், அவத்தைப் பிரயோகம், என்பனவாம்.

## தங்க ஓடுகள்

உச்வாச நிச்வாசங்களாகிய உயிர்ப்புக்கள் இருபத் தோராயிரத் தறுநூறும் மேலேகைமரங்கள் மீது சேர்க் கப்பெற்றுள்ள தங்க ஓடுகளாக விளங்குகின்றன.

## ஆணிகள்

நாடிகள் எழுபத்திரண்டாயிரமும் ஆணிகளாக விளங்குகின்றன.

சைலபுத்ரீ ப்ரஹ்மசாரணீ, சந்த்ரகண்டா, கூச் மாண்டகா, ஸ்கந்தமாதா, காத்யாயனீ, காளராத்ரீ மகாகௌரீ, ஸித்திதா என்பவை நவசக்திகளுக்கும் பெயர்களாம். மனோன்மணி சர்வபூததமனி - பலப்பிரத

மனி, பலவிகரணி, கலவிகரணி, காளி, ரௌத்திரி, சேட்டைவாமை, என்பவற்றை ஒன்பது சக்திகள் பெயராகக் கூறுவதும் உண்டு.

இங்கு சிற்சபையின் அமைப்புகள் பற்றி ஒருவாறு சுருக்கிக் கூறப்பட்டிருக்கிறது. இன்னும் பல உண்மைக் கருத்துக்கள் உள்ளன. அவற்றை நூல்கள் வாயிலாகப் படித்தும் தக்கார் வாயிலாகக் கேட்டும் தெரிந்து கொள்க.

நடராஜப் பெருமானது சிற்சபையைச் சுற்றி அடுத்து விளங்கும் பிரகாரத்திலே காணப்படும் இரண்டடுக்கு மண்டபத்தைத் திருமாளிகைப்பத்தி மண்டபம் என்று கூறுவர். இந்த மண்டபக் குறட்டிலே திருவிளையாடற் புராண சரித்திரங்களைக் கருங்கல்லினாலே உருவங்களாகச் செய்வித்திருக்கிறார்கள்.

அதனையடுத்துள்ள இரண்டாம் பிரகாரத்தில் மிகப் பெரிய தூண்கள்மீது சிங்கங்கள் வைத்துக் கட்டப்பட்டிருக்கும் பெரிய மண்டபம், அணியொட்டிக்கால் மண்டபம் என்னும் பெயரால் வழங்கப்படும்.

## ஸ்ரீ நடராசப்பெருமான் திருவுருவ அமைப்பு

சிற்சபை பொலியத் திருநடம்புரியும் சிவபெருமான் கோடிசூரியர் ஒருங்குசேர்ந்தாற்போன்ற மிக்க ஒளியுடையவர். திருப்புன்முறுவலுடன்கூடிய ஒரு திருமுகமும், மூன்று திருக்கண்களும், கங்கை, பிறை, கொன்றைமாலை முதலியவற்றோடு கூடிய பின்றாழ்சடையும் உடையவர். அவருடைய வலது திருச்செவியில் குண்டலமும், இடது திருச்செவியில் திருத்தோடும் ஒளிர்கின்றன. திருநீலகண்டம் அவருக்கு உயிர்கண் மாட்டுள்ள பேரருளை விளக்குவதாக அமைந்துள்ளது.

அபயம் பொருந்திய திருக்கையும், உடுக்கையேந்திய திருக்கையும், வலப்பாகத்திலும்; அக்கினியகல்பொருந்திய திருக்கையும் தொங்கவிட்ட மற்றொரு திருக்கையும் இடப்பாகத்திலும் விளங்கப் புலித்தோலை ஆடையாக உடுத்து, நெறிப்புப்பொருந்திய திருவரையோடு, முயலகன் மேல்ஊன்றிய வலத்திருப்பாதமும், தூக்கிவளைத்த இடத்திருப்பாதமும் உடையவராக விளங்குகின்றார்.

அருகில்உள்ள சிவகாமியம்மையார் பச்சைநிறத் திருமேனியுடையவர். திருமங்கலநாண் இவருடைய திருக்கழுத்திலே மிளிரும். வலது திருக்கரம் செங்கழுநீர் மலரேந்தியிருக்க இடது திருக்காத்தைக் கீழேதொங்க விட்டு ஒடுங்கிய நிலையுடைவராகவிளங்குவர்.

நடராஜப்பெருமானைக் கண்டுவணங்கிய பெரியார்கள் அத்தோற்றத்தின் பொலிவை வியந்து பலவாறுகத் துதித்துள்ளனர். திருநாவுக்கரசு சுவாமிகள் திருநடனக் குறிப்பை;

... ... ... "தில்லையுட் சிற்றம்பலத்து நட்டம்
என்றுவந்தாய்என்னும் எம்பெருமான்றன்
[திருக்குறிப்பே"

எனப்பொதுவாகக் கூறியதன்றி ஒவ்வொரு அங்கங்களையும் சிறப்பித்துக்,

"குனித்தபுருவமும், கொவ்வைச் செவ்வாயின் குமிண்
[சிரிப்பும்,
பனித்தசடையும் பவளம்போல் மேனியிற் பால்
[வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற்பாதமும் ..." எனவும்
"முடிகொண்டமத்தமும் முக்கண்ணின் நோக்கும்
முறுவலிப்பும்

துடிகொண்ட கையும் துதைந்த வெண்ணீறும்
சுரிகுழலாள்
படிகொண்ட பாகமும்பாய்புலித்தோலும் எனவும்

தமது திருப்பதிகங்களால் துதித்துள்ளனர்.

இஃதன்றி வேறொரு திருப்பதிகத்தில் ஒவ்வொரு பாடல்களில் ஒவ்வொருஅங்கத்தைச்சிறப்பித்து,

.........' உடுத்த துகில்கண்ட கண்கொண்டு
மற்றினிக் காண்பதென்னே" எனவும்

........."உந்தியின் மேலசைத்த, கச்சினழகு கண்டாற்
பின்னைக் கண்கொண்டு காணபதென்னே" எனவும்

........." விளக்கொத்த நீலமணிமிடற்றான் கைஞின்ற
ஆடல் கண்டாற் பின்னைக் கண்கொண்டுகாண்ப
தென்னே" எனவும்

........." வன்னஞ்சையுண்ட கண்டத் திலங்கும்
எனத்தெயிறுகண்டாற்பின்னைக் கண்கொண்டு
மற்றினிக்காண்ப தென்னே" எனவும

........."சிரித்த முகங்கண்ட கண்கொண்டு மற்றினிக்,
காண்பதென்னே" எனவும்.

........." நெற்றியிற் கண்கண்ட கண்கொண்டு
மற்றினிக் காண்ப தென்னே" எனவும்

அப்பதிகமுழுவதும் இவ்வாறே துதித்திருக்கின்றனர்.

" பிறப்பில் பெருமானைப் பின்தாழ் சடையானை"

என்று திருஞானசம்பந்த சுவாமிகளும்,

" கடுத்தாடுங் கரதலத்திற் றமருகமும் எரியகலும்
கரியபாம்பும், பிடித்தாடி........."

என்று சுந்தரமூர்த்தி சுவாமிகளும் துதித்திருக் கின்றனர். திருமுறைகள் முழுதும் பலவிடங்களில் இவ்வாறு காணப்படுவதால் ஆங்காங்கு கண்டுகொள்க.

இன்னும் குமரகுருபர சுவாமிகள், இரட்டையர், காளமேகப் புலவர் முதலிய தெய்வீகப் புலவர்களும், பிறரும் தாங்கள் பாடிய பிரபந்தங்களிலும் தனிக்கவி களிலும் கற்பனைசெய்து நடராஜாவைப் புகழ்ந்துபாடும் கவிகளையும், கருத்துக்களையும் எழுதப்புகின் மிகவிரியும்.

## திருவுருவ அமைப்பிற்குக் காரணம்.

தேவதாரு வனத்திலிருந்த நாற்பத்தெண்ணாயிர முனிவர்களும் சிவபெருமானிடத்திலே அன்பற்றவர் களாய்க் கருமமே வீடுபேற்றைத் தரவல்லதென்று நம்பினார்கள். கடவுளருளின்றித் தாமே முயன்று வீடு பேற்றை யடையலாம் என்று எண்ணினார்கள். உடம்பு துன்பத்தை யடையுமாறு அளவிறந்த தவங்களையுஞ் செய்தார்கள். சிவபெருமான் அம்முனிவர்களுடைய மாறுபாட்டுணர்வைப் போக்க விரும்பினார். திருமாலை யழைத்து மோகினி வடிவம்கொள்ளச் செய்தார். தாம் மிகுந்த அழகுவாய்ந்த ஆணுருவங்கொண்டார். சூலமும் பலிப்பாத்திரமும் கையிற்கொண்டு மோகினியுடன் தாரு காவனத்தையடைந்தார். திருமால் இறைவன் கட்டளைப் படி முனிவர்கள் இருக்கும் இடத்தை அடைதலும் முனி வர்கள் மோகினியைக் கண்டு மயங்கினார்கள். மிகுந்த காமவேட்கை கொண்டனர், தவவலி குன்றி வேள்வியை விட்டார்கள். மோகினியைச் சூழ்ந்துகொண்டு பலவாறு பிதற்றினர். முனிவர்கள் பெருமை முற்றும் அழிந் தொழிந்தது. இஃதிவ்வாறாக,

பலியேற்குந் திருவுருவங்கொண்ட இறைவன் முனிவர், பன்னியர் இருக்குந் தெருக்களிற் சென்று ஐயமேற் பார்போல இசையோடு மறைகள் பாடினார். அவ்வொலி கேட்ட முனிவர் பன்னியர்கள் உள்ளம் உருகினார்கள். வெளிப்போந்து இறைவன் றிருவுருவைக் கண்ணாரக் கண்டார்கள். காமன் கணைகளால் உணர்வுகெட்டுச் சோர்ந்தார்கள். காமக்கடலில் அழுந்தி நிலைகலங்கி இறைவனை நெருங்கிச் சூழ்ந்தனர். உடுத்திருந்த உடை அணிந்திருந்த வளையல் அணிகலன் முதலியன எல்லாம் இழந்தனர். நாணமும் கற்புங்கெட உயிரை மட்டுந் தாங்குபவர்களாய் ஆடையற்ற இறைவனைப் பின் தொடர்ந்து சென்றார்கள்.

இறைவன் ஆடியும், பாடியும் பல திருவிளையாடல்கள் செய்துகொண்டு சென்றார். காம மயக்கத்துடன் பின்சென்ற முனிவர் பன்னியர் அனைவரும் கருப்பமடைந்து நாற்பத்தெண்ணாயிரம் புதல்வர்களைப் பெற்றனர். அப் புதல்வர்கள் இறைவனையடைந்து அவர் திருவடிகளை வணங்கித் துதித்து நின்றனர். இறைவன் அவர்களை நோக்கி "நீங்கள் நம்மை எண்ணி இங்கேயே தவத்தைச் செய்துகொண்டிருங்கள்." என்று கட்டளையிடுதலும், அவ்வாறே அவர்கள் ஒருபால் தவம் செய்துகொண்டிருந்தனர்.

## முனிவர்கள் சீற்றங்கொண்டு வேள்விசெய்தல்

முனிவர் பன்னியர் பின்தொடர்ந்துவர இறைவன் தெருவைக் கடந்து அப்பாற் செல்லும்போது, முனிவர்கள் பின்தொடர அரிவை வடிவமொடு வந்த திருமாலும் அவ்விடத்தை அடைந்தனர். அப்போது இறைவன் அம் முனிவர்களுக்கு வேறொரு வடிவத்தைக்காட்டி நின்றார். தம் பன்னியர்களைக் கண்ட முனிவர்கள் நாம்

இந்த மோகினியைக்கண்டு மயங்கியதுபோல இம்மங்கையர்களும் இவ்வாடவனைக்கண்டு மயங்கினர் போலும் என எண்ணினார்கள். தம் மனைவியர்கள் இழிநிலையைக் கண்டதனால் மோகினிமீது கொண்ட மயக்க உணர்வு சற்று நீங்கப்பெற்று யாவரும் ஒன்றுகூடி எண்ணமிட்டார்கள்.

தம்மை மோகினி வடிவம் கொண்டு மயங்கச்செய்தவர் திருமால் என்றும், மனைவியர் கற்பைக் கொள்ளை கொண்டவர் சிவபெருமான் என்றும் உணர்ந்து, தம் மனைவியர் கற்பு அழிந்தமைக்கு வருந்தினர். அடக்குதற்கு அரிய கோபம் எழுந்தது. மனைவியர்களைப் பார்த்து நீங்கள் இறந்துபோதல் நல்லது என்றும், அல்லது உங்கள் உங்கள் ஊருக்குப் போய்விடுங்கள் என்றும் கூறிச் சீறினார்கள். இதனால் முனிவர் பன்னியர் ஒருவாறு தெளிவடைந்தவராய் அருகில் உள்ள தங்கள் இருப்பிடங்களைச் சேர்ந்தார்கள்.

சிவபெருமான்மீது சீற்றம்கொண்ட முனிவர்கள் அவரைக் கொல்லும் பொருட்டு (அபிசார ஓமம் என்னும்) இழிந்த ஒரு வேள்வியை செய்வது என்று முடிவு செய்து அதனைச் செய்தார்கள்.

## புலி வருதல்

அவர்கள் செய்த வேள்விக்குழியினின்றும் ஒரு புலி தோன்றிற்று. கண்களினின்றும் தீப்பொறிகக்கித் தடுத்தற்கரிய கோபம் உடையதாய் அச்சம்தரும் தோற்றத்தோடு இடிபோன்ற குரலுடன் வெளிப்பட்டது. தறுகண்மை வாய்ந்த அப்புலியைச் சிவபெருமானைக் கொல்லும் பொருட்டு முனிவர்கள் ஏவினார்கள். அப்புலி

யாவரும் நடுங்கும்படியாக வருதலும் சிவபெருமான் அப்புலியைப் பிடித்துத் தோலை உரித்து ஆடையாக உடுத்திக்கொண்டார்.

## பூதங்கள் தோன்றுதல்

பின்னர் அவ்வேள்விக் குழியினின்றும் அளவற்ற பூதங்கள் தோன்றின. சிவனுடைய ஆற்றலை மாற்றும் பொருட்டு அப்பூதப் படைகளை ஏவுதலும், சிவபெருமான் அப்பூதங்களைத் தமக்கு அடிமையாக்கிக் கொண்டார்.

## சர்ப்பம் தோன்றுதல்

பின்பு தோன்றி வந்த சருப்பத்தை முனிவர்கள் சிவபெருமான் மீது ஏவுதலும் அதனைத்திருக்கரத்திலே கடகமாக்கி அணிந்து கொண்டார்.

## உடுக்கை வருதல்

பின்பு உலகங்கள் செவிடாகும் வண்ணம் ஒலித்துக் கொண்டு சிவபெருமான் அண்மையில் வந்த ஓர் உடுக்கையை ஒரு திருக்கையால் பற்றினார். "நம்முடைய காதின் அண்மையில் ஒலித்துக்கொண்டிருப்பாயாக" என்று கூறி ஏந்தி நின்றார்.

## முயலகன் வருதல்

சினத்தால் அறிவிழந்த தாருகாவன முனிவர்கள் சிவபெருமானுடைய பெருமையை நன்கு உணர்ந்து கொள்ளாதவர்களாய் மேலும் வேள்வி செய்யக் குறள் வடிவினதாகிய முயலகன் தோன்றி வந்தது. அதன் முதுகு நெரியும்படி அதன்மேலே வலப் பாதத்தினால் மிதித்துக்கொண்டார்.

## வேள்வித் தீயும் மந்திரங்களும் வருதல்

சிவபெருமானைநோக்கி முனிவர்கள் உள்ளங்குலைந்து வேள்வியை நிறுத்தி வேள்வித் தீயையும், மந்திரங்களையும் விடுத்தனர். தம்மிடம் வந்த வேள்வித்தீயை ஒரு திருக்கையில் ஏந்தினார். மந்திரங்களைத் திருவடியிலே திருச்சிலம்புகளுக்குத் தரிசாகச் சாத்திக்கொண்டார்.

## சாபம் இடுதல்

சிவபெருமான் எதற்கும் அழியாது நிற்றலைக்கண்ட தாருகாவனத்து முனிவர் எண்ணற்ற சாபங்களைச், சிவன் அழிக என்றுகூறிஉரைத்தார்கள். அச்சாபவுரைகளும் பயன் படாதொழிந்தன. முனிவர்கள் சினம் நீங்கி ஆற்றல் குறைந்து எச்செயலும் அற்று நின்றார்கள்.

## முனிவர்கள் அருள் பெறுதல்

சிவபெருமான் அந்நாற்பத் தெண்ணாயிர முனிவர் கட்கும் அருள் செய்யத் திருவுளங் கொண்டார். ஆகாய மார்க்கமாக இடபவாகனத்தோடு வந்த உமாதேவியார் தமது இடப்பக்கத்திலே பொருந்தி நிற்க, முயலகன்மீது நின்று நடித்தார். அதனைத் தாங்கலாற்றாது உலகங்களெல்லாம் நடுங்கின. தாருகாவனமும் நடுங்கியது. அத்திருக்கூத்தை நான்முகன், திருமால், இந்திரன் முதலிய தேவர்கள் பார்த்து மகிழ்ந்தார்கள். நாற்பத்தெண்ணாயிர முனிவர்கள் தங்கள் ஆணவ மலசத்திகளெல்லாம் கூடி வந்து ஆணவ மூலமாகிய முயலகனைப் பொருந்தத் தாங்கள் அந்தக்கூத்தைத்தெரிசித்துச்சிவானந்த பரவசரானார்கள்.

தம்மை மதியாத தாருகாவனத்து முனிவர்கள் அனைவருக்கும் சிவபெருமான் நல்லறிவைக் கொடுத்தரு

ளினர். அவர்கள் சிவபெருமானை வணங்கிப் போற்றினார்கள். சிவபெருமான் உலகங்கள் அஞ்சுதலைக்கண்டு தம்முடைய திருக்கூத்தை யொழித்து அனைவர்மீதும் திருக்கண்சாத்தி "நீங்கள் நமது திருக்கூத்தைச் சிவலிங்கத்திலே தியானித்து வழிபடுங்கள" என்று பணித்துவிட்டு உமாதேவியாரோடும் காளையூர்திமேற் கொண்டு மறைந்தருளினார். மறைந்தருளிய திக்கை நோக்கி வணங்கி எல்லோரும் அகன்றனர்.

இத்தாருகாவனத்திலே இறைவன் திருக்கூத்தியற்றியதைத் திருமால் ஆதிசேடனுக்குரைத்தபோது அவர் தாமும் பார்க்க எண்ணித் தவம் செய்து பதஞ்சலி முனிவராக இத்தலத்துக்கு வந்தார். வியாக்கிரபாத முனிவர், பதஞ்சலி முனிவர் முதலானவர்களுடைய வழிபாட்டுக்கு மகிழ்ந்து, அவர்களுக்கு அருள்செய்யும் பொருட்டு, இத்தலத்திலே திருநடனம் செய்தார்; என்னும் வரலாறு, பழைய வரலாறுகள் என்னும் தலைப்பின் கீழ்க் கூறப்பட்டிருக்கிறது.

## திருக்கூத்தின் வகை

### தூல நடனம்

இன்னும் தூல நடனம், சூக்கும நடனம், அதிசூக்கும நடனம் என மூவகைப் படுத்திக்கூறும் வழக்கமும் உண்டு. இங்கே கூறியபடி ஆன்மாக்கள் எளிதிலே கண்டு தரிசிக்கு முறையில் செய்தருளும் திருக்கூத்து தூல நடனமாம.

### சூக்கும நடனம்

உலக முழுவதையும் ஒடுக்குவிக்கும் பிரளயத்திலே கேவலத்திலே ஆன்மாக்களை ஒடுங்கச் செய்து தேவியுந்

தாமுமாய்த் தனித்து நிற்கும் நிலையில் அம்மைகாண நடித்தருளும் திருக்கூத்து சூக்கும நடனம் எனப்படும்.

“மூவெயில் செற்றஞான் றுய்ந்த மூவரி
லிருவர் நின் திருக் கோயிலின் வாய்தல்
காவ லாளரென் றேவிய பின்னை
யொருவநீ கரிகாட் ரங்காக
மானை நோக்கியொர் மாநட மகிழ
மணிமுழா முழக் கவருள் செய்த
தேவ தேவநின் திருவடி யடைந்தேன்
செழும்பொ ழில் திருப் புன்கூ ருளானே”

என்னும் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரத்திலே, உலகம் ஒடுங்கிய பிரளயத்திலே செய்யும் சூக்கும நடனம் கூறப்படுகிறது. “நள்ளிருளில் நட்டம் பயின்றாடு நாதனே” என்பதும் இதுவேயாம் என்க.

## அதிசூக்கும நடனம்

பிரமபுரமாகிய சரீரத்திலுள்ள தகரமாகிய புண்டரீக வீட்டினுள் திருநிருத்தஞ் செய்வது அதி சூக்குமநடனம் எனப்படும். தகரவித்தை சாந்தோக்கியோப நிடதத்திலே கூறப்படுகிறது. இன்னும் பிராணயாபி நடன முதலியவாக வேறு சில கூறுவாருமுளர்.

## சிதம்பர இரகசியம்

தில்லைத் திருக்கோவிலில் இறைவன் உருவத்திருமேனி கொண்டு ஐந்தொழில் நாடகம் செய்தருளுவதன்றி அருவத் திருமேனி கொண்டும், அருவுருவத் திருமேனி கொண்டும் விளங்குகின்றார். இறைவனது அருவத் திருமேனியே இரகசியம் என்று சொல்லப்படும். ஒருவரும் அறியா நிலைமையில் மறைவாக வைக்கப்பட்

டிருக்கிறது. எந்தக் காலத்திலும் கருநிறமான திரையினால் மூடப்பட்டிருக்கும். இது சிற்சபையின் நடுவில் நடராசாவுக்கு வலப்பாகத்தில் இருக்கிறது. நாடோறும் நடைபெறும் ஆறுகால பூசைகளில் மும்மூன்று முறை இரகசியதெரிசனம் காண்பிக்கப்படுகிறது. மற்ற நேரங்களில் தெரிசிக்க விரும்பினால் அதற்கு ஏற்படுத்தப்பட்டுள்ள கட்டணம் கொடுத்துத் தெரிசிக்க வேண்டும். இது மந்திரம் அமைக்கப் பெற்ற சிதம்பர சக்கரம் என்று சொல்லப்படுகிறது. புனுகு சாத்தப்பட்டிருக்கும். பொன்னாலாகிய வில்வமாலைகள் தொங்கவிட்டிருக்கிறார்கள். திரைநீக்கிக் கற்பூர தீபம் காட்டும்போது தெரியவரும். தெரிசிக்கும்போது தங்களுக்கு வேண்டும் வரங்களை எல்லாம் விண்ணப்பித்து வழிபாடு செய்க.

## சந்திரமௌளீசுரர்

சிற்சபையில் நடராசாவுக்கு முன்பாகத் தங்கப் பெட்டகத்துள் இருக்கும் படிகலிங்கத்துக்கு சந்திர மௌலீசுரர் என்றுபெயர். நடராசாவுக்கு நடக்கும் ஆறுகாலபூசையிலும் இம்மூர்த்திக்கே அபிஷேகாதிகள் நடத்தப்படுகின்றன. இஃது இறைவனது அருவுருவத் திருமேனியாகும்.

## இரத்தினசபாபதி

மணியாலமைக்கப்பட்ட காரணத்தால் இரத்தின சபாபதி என்றுபெயர். பகற்காலத்தில் நடக்கும் இரண்டாங்காலபூசையில்மட்டும் இம்மூர்த்திக்குஅபிஷேகாதிகள் நடத்தப்படுகின்றன. இம்மூர்த்தி கர்ப்பூர தீபம் காட்டும்போது ஒளிவடிவாய் விளங்குகிறது.

## சுவர்ணகால பைரவர்

சிதம்பரத்தில் இருந்து புண்ணியம் செய்தால் ஒவ்வொரு புண்ணியமும் பற்பலவாகப் பல்குவது போலவே, அத்தலத்திலிருந்து பாவஞ்செய்யினும் ஒவ்வொரு பாவமும் பற்பலவாகப் பல்கும். சிதம்பரத்திலே திருநடனம் தெரிசிப்பவர்கள் பாவஞ்செய்தவராயின் இயமனுலே நரகத்திலே தண்டிக்கப்படார். இவ்வைரவக் கடவுளுடைய சூலநுனியிலே பல்கோடி கற்பகாலம்வரை தண்டிக்கப்பட்டுப் பின் முத்தியெய்துவர் இருபத்தெட்டுக்கோடி நரகங்ககளிலும் நெடுங்காலம் வரை படும் துன்பம், இவ்வைரவக் கடவுளுடைய சூலநுனியிலே ஒரு கணப்போது படும் துன்பத்திற்கு இணையாகாது.

தாங்கள் முன்செய்த பாவங்களை நினைந்து நினைந்து, நடுநடுங்கி அதற்காக மிகவும் வருந்திச் சிதம்பரம் அடைந்து, சிவகங்கையில் மூழ்கி நடராசப் பெருமானைத் தரிசித்தால் அதனுலும், சிதம்பரத்தில் வசிப்பதனுலும் அப்பாவங்கள் நீங்கும். பின்னும் பின்னும் அறிந்து செய்பவருக்கு அப்பாவம் நீங்காது. மனம் அறியாமற் செய்யும் பாவமே நீங்கும் என்பதறிந்து மனம், வாக்குக் காயம் என்னும் மூன்றினுலும் பாவம் செய்யாமல் வாழ்க. சுவர்ணகால பைரவர் என்ற பெயருக்குப் பல்வேறு காரணங்கள் கூறுகிறுர்கள். நூல்களில் அவ்விதமாக விவரங்கள் ஒன்றும் காணப்படவில்லை.

கனகசபையிலுள்ள பதஞ்சலி, வியாக்கிரபாதர், நந்தி 'தேவர் இவர்களையும், சிற்சபையிலுள்ள நடராஜப் பெருமான், சிவகாமியம்மை, இரத்தினசபாபதி, சந்திரமௌலீசுவரர், இரகசியம், சுவர்ணகாலபைரவர் இன்னும் அவ்

குள்ள வேறு மூர்த்திகள் எல்லாவற்றையும் தரிசித்து, அழலிடைப்பட்ட மெழுகுபோலமனமுருகி, ஆனந்த வருவிபாய, மயிர்ப்புளகங்கொள்ள, தழுதழுத்த நாவோடு தோத்திரம் செய்து வழி பாடாற்றுக மும்முறை வலம் வருக.

## சண்டேசுரர்

பரமானந்த கூபத்துக் கருகில் உள்ள சண்டேசுரர் ஆலயத்தில், சண்டேசுரரைத் தரிசித்துக்கொண்டு சுவாமி சந்நிதியை அடைந்து, நமஸ்கரித்து இருந்து கொண்டு ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை நூற்றெட்டுருச் செபித்துக் கொள்க. இவ்வாலயத்தில் நான்கு முகத்துடனும், ஒரு முகத்துடனும், இரண்டு மூர்த்திகள் இருக்கக் காணலாம். சண்டேசுரருக்கு நான்கு திருமுகங்களுண்டு என நூல்களிலே சொல்லப்படுகிறது. நான்கு திருமுகம் இருப்பதனுல் பிரமதேவர் என்று சொல்லுவதைக் கொள்ளற்க. சண்டேசுரர் சந்நிதியில் வழிபடும்போது மூன்று முறை மெல்லக் கைதட்டிச் சிவாலய தரிசன பலத்தைத் தரவேண்டுமென்று வேண்டிக் கொள்க.

## தில்லைக்கோவிந்தராஜப்பெருமாள்

நடராசர் சந்நிதிலேயே அடுத்துக் கிழக்கு முகமாக விளங்கும் ஆலயத்தில், தென்திசையில் தலைவைத்துக் கிடந்த திருக்கோலமாக இத்திருமால் காட்சியளிக்கிறுர்.

சுவாமி பெயர்:- தில்லைக்கோவிந்தராஜப் பெருமாள்

தேவியார் பெயர்:- புண்டரீகவல்லித்தாயார்

தேவியார் ஆலயம் இவ்வாலயத்திற்குத் தெற்கே தனியே விளங்குகிறது. இத்தலம் தில்லைத் திருச்சித்திர கூடம் என்னும் பெயரால் நூற்றெட்டுத் திருப்பதிகளுள் ஒன்றாக எண்ணப்பட்டு வருகிறது. கிடந்த திருக்கோல மான மூர்த்திக்கு முன்னே உற்சவங்கொண்டெழுந் தருளும், வேறுசில மூர்த்திகளும் விளங்கக் காணலாம். திருவாயிலில் காணப்படும் துவாரபாலகர்கள் தோற்றம் பொலிவுடையதாகும். திருமாலின் வேறுபல திருவுருவங் களும் ஆங்காங்குக் காணலாம். தேவியாலயத்திலும், இவ்வாலயத்திலும் வழிபாடு செய்துகொள்க.

கொடிமரம் உற்சவம்:- இவ்வாலயத்திற்குக் கிழக்கே கொடிமரம் தாமிரத்தினால் செய்து நிறுத்தப்பட்டிருக் கிறது. கொடியேற்றித் திருவிழாக் கொண்டாடும் வழக்கம் கிடையாது. வேறு சில உற்சவங்கள் நடை பெறுகின்றன.

இவ்வாலயத்திலுள்ள கோவிந்தராஜப் பெருமாளுக் குத் தில்லை மூவாயிரவராகிய தீட்சிதர்களே பூசைசெய்து வந்திருக்கிறார்கள். பிற்காலத்துச் சைவர்கள், வைஷ்ண வர்கள் என்ற பேதங்கொண்ட சிலரால் அது மாறு பட்டிருக்கிறது. இத்தலத்தில் முற்காலத்திருந்த சிற் றரசர் சிலரால் நடராஜப் பெருமானுக்குப்பூசை நடவாத படி தடைசெய்து அவைகளையெல்லாம் தில்லைக்கோவிந் தராஜப் பெருமாளுக்கு நடத்தும்படி ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது என்பதையும்,பின் திருவாவடுதுறைஆதீன குருமூர்த்திகளாகிய நமசிவாயதேசிகர் தெரிந்து தம் சீடரைக் கொண்டு முன்போலச் செவ்வனே சிவாலய பூசை நடப்பதற்கு ஏற்பாடுகள் செய்தார்கள் என்ப தையும், பெரியார்கள் சரித்திர வாயிலாக அறிகிறோம். பல காலங்களில் இவ்விதப் போராட்டம் நடந்திருக்க

வேண்டும். என எண்ணவேண்டி வருகிறது. ஆலயம் தற்போது இருக்கும் அளவில் இல்லாமல் சிறு ஆலய மாக, அஃதாவது கனகசபைப் பிரகாரத்தில் விநாயகர் முதலிய மூர்த்திகளுக்குச் சிறு அறைபோல அமைக்கப் பட்டிருக்கும் ஆலயம் போன்ற ஒரு ஆலயத்தில் அமைத்து சைவர்களே பூசித்து வழிபட்டு வந்திருக் கிறார்கள். சைவக் கோவில்களுக்குள் திருமாலை வைத்து வழிபாடு செய்வது என்பது என்றும் உள்ளசெயலே. காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் சந்நிதிக்கு எதிரிலும், அவ் வூர்க் காமாட்சியம்மன் அருகில், ஆலயத்தில் மக்கள் உள்ளே செல்லும் வாயிற்பக்கத்தும் வேறு இடங்களி லும் திருமாலை வைத்து வழிபட்டு வந்திருக்கின்றனர். இன்றும் வழிபடுகின்றனர். அவைகளுக்கு ஆழ்வா ராதியர் திருப்பாடல்களும் இருக்கின்றன. இங்குள்ள மூர்த்தியைத் தில்லைவாழந்தணர்களே பூசித்து வந்தனர் என்பதைக் குலசேகராழ்வார் தமது கவியில் வைத்து,

“ தில்லை நகர்த் திருச்சித்திர கூடந்தன்னுள்
அந்தணர்கள் ஒரு மூவாயிரவர் ஏத்த
அணிமணி யாசனத் திருந்த அம்மான் ”

என்று போற்றுகின்றார்.

பழங்காலத்து வாழ்ந்த பெரியார்கள் உள்ளமானது, நன்மை சார்ந்த நிலைமையிலேயே, பண்புகள் நிறைந்து விளங்கி இருந்தன. ஆதலினால் அவர்கள் பேதம் ஒன் றும் எண்ணவில்லை. சைவர்கள் வைத்து வழிபாடாற் றும் ஆலயங்களுக்கும் சென்றார்கள். அங்குள்ள திரு மாலுக்கும் தமது கவியலங்கலைச் சூட்டி வழிபட்டு வந்தார்கள்

பிற்காலத்தவர்கள் அதனைத் தவறு என்றோ, குறைபாடுடையது என்றோ எண்ணிவிட்டார்கள். அவ்வழி பாடு பிடிக்கவில்லை. ஆதலின் சைவக்கோவிலைப்பூட்டிவிட்டார்கள். அதுமட்டுமல்ல சைவக்கோவிலில் ஒரு பகுதியை இடித்துத்தள்ளிவிட்டு அதன்மீதே தமது கோவிலைப்பெரிதாகக் கட்டினார்கள். அந்தக்கோவில் சிலகாலத்துக்கு முன்னர்க்கூட இருந்துவந்தது. இப்போது அவைகளைப்பிரித்துப் புதிதாகக் கட்டப்பட்டபோது அவைகள் அனைத்தும் நகரமக்களால் பார்க்க முடிந்தது. இன்னும் பிரிக்கப்படாமல் இருக்கும் பகுதிகளாகிய தில்லைக்கோவிந்தராஜப்பெருமாள் எழுந்தருளியிருக்கும் இடத்தின்கீழே பழயஆலயம் இருந்துவருகிறது. அதில் திருமாளிகைப்பத்தி மண்டபக்குறடு வடக்கே உள்ள விநாயகராலயத்திலிருந்து வருவது, நேரே தெற்குநோக்கி உள்ளேசெல்கிறது. அதுபோலவே அச்சந்நிதி வாயிற்படிமத்தியில் ஒருகுறடு கிழக்குநோக்கிவந்ததை யாவரும்பார்த்தபின்பு பிரித்துவிட்டார்கள். இப்போது போடப்பட்டிருக்கும் பெரிய மண்டபத்தின்நடுமத்தியில் அக்குறடுஇருந்தது. இராஜகோபுரங்கூட தனியேகட்டப்படவில்லை. நடராஜர்கோவில் திருமதிலையிடித்துப் பிற்காலத்தில் கட்டியிருக்கிறார்கள்; ஆதலினால் இடிந்ததை அகற்றிப் பிற்காலத்தில் புதிதாக இராஜகோபுரம் கட்டும்பொழுது கீழேபுதைக்கப்பட்டுக்கிடந்த திருமதிலும்கூடக் காணக்கிடந்தது. இன்றும்கூட இராஜகோபுரத்தின் கீழ் அம்மதிலின் அஸ்திவாரம் ஆழத்திலேயிருக்க அதன்மீதே இராஜகோபுரம் கட்டியிருக்கிறார்கள். இவ்வளவும் கூறியது எற்றுக்கெனின், பின்னும்இவைகள் வேண்டற்பாலன அல்ல, யாவரும்ஒன்று படவேண்டும் என்பதுணர்த்துதற்கேயாம் என்க.

## நித்தியபூசை திருவிழாக்கள்

இக்கோயிலில் நாடோறும் நடராசாவுக்கு ஆறு கால பூசைகள் நடந்துவருகின்றன.

அவைகளின்பெயர் விவரங்களாவன:-

| | | | |
|---|---|---|---|
| | காலைமணி | 6-30 ... | திருவனந்தல் [பால் [நிவேத்தியம் |
| 1. | பகல்மணி | 8-30 ... | முதற்காலம் (காலைசந்தி) |
| 2. | ,, | 10-30 ... | இரண்டாங்காலம். |
| 3. | ,, | 12- 0 ... | உச்சிக்காலம். |
| 4, | இரவுமணி | 6- 0 ... | சாயரக்ஷை. |
| 5. | ,, | 8- 0 ... | இரண்டாங்காலம். |
| 6. | ,, | 10- 0 ... | அர்த்தசாமம். |

இவ்வாறு காலங்களிலும் சந்திரமௌலீசுரருக்கு அபிஷேகமுதலியவைகளும் நடராசர் சந்நிதியில் சோட சோபசாரதீபாராதனைகளும் நடைபெறும்.

நடேசப்பெருமானுக்கு ஆண்டுதோறும் அபிஷேகம் செய்யப்படும்தினம் ஆறு. அவைகளாவன:-

சித்திரைத்திருவோணம், ஆனிஉத்திரம், மார்கழித் திருவாதிரை, ஆவணிவளர்பிறைச் சதுர்த்தசி, புரட்டாசி, வளர்பிறைச்சதுர்த்தசி, மாசி வளர்பிறைச்சதுர்த்தசி, என்பனவாம்.

ஆனி, மார்கழி மாதங்களில் வைகறைப்போதிலே ஆயிரக்கால்மண்டபத்திலும், மற்றமாதங்களிலே மாலைவேளையிலே கனகசபையிலும், சுவாமியை எழுந்தருளச் செய்து அபிஷேகம் செய்வார்கள். இதனை,

## நடேசர் அபிஷேக வெண்பா

சித்திரையில் ஓணமுதற் சீரானி உத்திரமாம்
சத்த தனு ஆதிரையுஞ் சார்வாகும்—பத்திவளர்
மாசி அரி கன்னி மருவு சதுர்த்தசிமன்
றீசரபி ஷேகதின மாம். என்னும் வெண்பாவாலறிக.

ஆனியுத்திரம், மார்கழித்திருவாதிரை என்பவை களைப்பத்தாம் திருவிழாவாகக் கொண்டு கொடியேற்றம் முதலாக விழா நடைபெறுகிறது. ஒவ்வொரு நாளும் காலை, மாலை இரண்டு வேளைகளிலும் ஐம்பெருங்கட்வுளர் திருவீதிக்கெழுந்தருளி அன்பர்கட்குக் காட்சி தருவர்.

மார்கழித் திருவாதிரையின்போது திருவெம்பாவைத் திருநாள் நடைபெறும். ஒவ்வொரு நாளும் மாலையிலே மாணிக்கவாசக சுவாமிகளை அலங்கரித்து நடராசர் சந்நிதிக்குக் கொண்டு வந்து திருவெம்பாவையோதும் போது ஒவ்வொரு பாடல்களின் முடிவில் ஒவ்வொரு தீபாராதனையாக இருபது பாடல்களுக்கும் செய்வார்கள்.

ஐப்பசிமாதத்துப் பூரத்திருவிழாவில் சிவகாமியம் மைக்கும், பங்குனிமாதத்து உத்திரத்திருவிழாவில் பாண்டிநாயகர்கோவில் சுப்பிரமணியசுவாமிக்கும் கொடி யேற்றம் முதலாகப்பத்துநாள் விழாநடைபெறுகிறது.

கார்த்திகைதீபம், தைப்பூசம் முதலிய வேறுசில நாட்களில் ஐம்பெருங்கட்வுளர் திருவீதிக்கெழுந்தருளு வர். கந்தர்சட்டிவிழாவில் சூரசம்மாரம்நடைபெறுகிறது. ஒவ்வொருபிரதோடத்திலும் திருவாதிரையிலும் இட்ப வாகனத்தில் சுவாமி எழுந்தருளுவர். வேறுசில உற்ச வங்களும் உண்டு.

## சிதம்பரத்தில் உள்ள பத்துத் தீர்த்தங்கள்

சிதம்பரத்திலே பத்துத் தீர்த்தங்கள் உள்ளன. அவையாவன :—

1. **சிவகங்கை:-** இது கனகசபைக்கு வடக்கே ஆலயத்துள் இருக்கும் திருக்குளமாகும். இது நாற்புறத்தும் படித்துறைகளோடு விளங்குவதுடன் நாற்புறமும் அழகிய சுற்று மண்டபத்துடன் இருக்கின்றது. மேலிருந்து இறங்கிவரும் வாயிற்படித்துறைகள் கிழக்கு, மேற்கு, வடக்கு ஆகிய இந்தப் பகுதிகளில் அமைந்திருக்கின்றன. அந்த மூன்று இடங்களிலும் தீர்த்தம் கொடுத்தருளப் பஞ்சமூர்த்திகள் எழுந்தருளி இருக்கக் கூடிய பெரிய மண்டபங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. இத்தீர்த்தத்தினுள் மேல்கரையில் சிவலிங்கம் தாபித்து இருக்கின்றனர். நடராசருக்கு நடைபெறும் ஆறு அபிஷேகத்திலும் இச்சிவலிங்கத்திற்கு அபிஷேகாராதனைகள் நடைபெறும். கோடைக்காலங்களில் தண்ணீர் குறைவாகும்போது மட்டும் சிவலிங்கம் வெளியே தோன்றும்.

இது சிவ வடிவம் எனவும், நடராசர் தெரிசனத்திற்கு அர்த்தசாமம் சிறப்புடைத்தாதல் போலச் சிவகங்கையில் மூழ்குவதற்கு மாசி மகம் சிறந்தது எனவும், நாடோறும் அதிலே மூழ்கிச் சந்தி வழிபாடுகள் செய்வது பெரும் புண்ணியம் எனவும், மாதப்பிறப்பு, திருவாதிரை, விதிபாதயோகம், வருஷப் பிறப்பு, சிவராத்திரி, சூரிய கிரகணம், சந்திர கிரகணம் முதலியவிசேட தினங்களிலே மூழ்குவது மகா விசேடமெனவும் நூல்களில் சொல்லப்படுகிறது.

ஆனித்திருமஞ்சனம், மார்கழித் திருவாதிரை, தைப் பூசம் என்பவைகளிலே பஞ்ச மூர்த்திகளும் திருவீதி வலம் வந்து தீர்த்தம் கொடுப்பதன்றி ; மாதம் தோறும் வரும் அமாவாசியிலும், சூரிய கிரகணம், சந்திர கிரகணம் முதலிய விசேட காலங்களிலும் சுவாமி எழுந்தருளி வந்து தீர்த்தம் கொடுத்தருளுவர். இத்தீர்த்தத்திலே இரணியவன்மன் மூழ்கிப் பொன்னிறமேனி பெற்றவரலாறு இந்நூலில் இரணியவன்மர் என்னும் தலைப்பின் கீழ்க் கூறப்பட்டுள்ளது.

**2.** குய்ய தீர்த்தம்:- சிதம்பரத்திலிருந்து வடகிழக்குத் திசையில் சமுத்திரத்திலுள்ள பாசமறுத்த துறை. ஏறக்குறைய ஆறு கல் தொலைவில் இருக்கிறது. தை அமாவாசியிலும், மாசி மகத்திலும் சுவாமி எழுந்தருளித் தீர்த்தம் கொடுத்தருளுவர்.

ஓர் அசுரனை வெல்லும் பொருட்டுப் போர் செய்யும் உபாயங் கற்பிக்கும்படி, குருவானவர் வருணனிடத்து இருளிலே வந்தார். வருணன் அவரைப் பகைவன் என்று நினைத்துப் பாசத்தை விடுத்தான். அதனால் குரு இறந்தார். அக்கொலைப் பாவம் வருணனைத் தொடர்ந்தது. பிசாசு வடிவம் தோன்றி இரண்டு கால்களிலும் இரண்டு கைகளிலும் பொருந்தக் கழுத்தோடு கூடும்படி கட்டிக் கடலினுள் இட்டது. அதனால் நெடுங்காலம் வருந்திய வருணனுக்குச் சிவபெருமான் மாசி மகத்தில் வெளிப்பட்டு அற்றுப் போகும்படி அருள் செய்தார். ஆதலால் அந்தத்துறை பாசமறுத்த துறை எனப் பெயர் பெற்றது. வருணன் அப்போது அத்துறையிலே மாசி மகத்தில் மூழ்கினவர் பாசம் நீங்கி முத்தி அடைய வேண்டுமென்று வரம் பெற்றான்.

இஃதன்றி ; மகாபாதகனாய் இருந்த துர்க்கடன் என்பான், பலரோடு படகில் ஏறிக்கொண்டு வாணிபத்தின் பொருட்டுக் கடலில் சென்றவன் அப்பாசமறுத்த துறையில் வரும்போது படகு கவிழ, அன்று மாசி மகமானதால் அவனும் முக்தி பெற்றான் என்பது வரலாறு.

**3. புலிமடு:-** இது நடராசப் பெருமான் சந்நிதியில் முக்கால் கல் தொலைவில் ஓடைவடிவமாக இருக்கின்றது. இதன் மேல்கரையில் புலிக்கால் முனிவரின் தந்தையராகிய மத்தியந்த முனிவரால் பூசிக்கப்பெற்ற இலிங்கமும் ஆலயமும் இருக்கின்றன. இந்தத் தீர்த்தத்திற்குச் சூல தீர்த்தம் என்று பெயர் என்றும், புலிக்கால் முனிவரால் செப்பம் செய்யப்பெற்றபின் இப்பெயர் வந்தது என்றும் சொல்லப்படுகிறது.

**4. வியாக்கிரபாத தீர்த்தம்:-** இது திருப்புலீச்சுரம் என்னும் இளமையாக்கினார் கோயிலுக்கு எதிரில் உள்ளது. இளமை நாயனார் குளம் எனவும் பெயர் பெறும். இத்தீர்த்தத்தில் திருநீலகண்ட நாயனாரும் அவர் மனைவியாரும் முதுமைப் பருவத்தோடு மூழ்கி எழுந்த அளவில் இளமைப் பருவம் அடைந்தார்கள். தைமாத விசாகத்தன்று இவ்விழா நடைபெறுகின்றது.

**5. அனந்த தீர்த்தம்:-** நடராசர் மேற்கு சந்நிதிக்கு நேரே ஒரு கல் தொலைவில் அனந்தேசுரர் கோயிலுக்கு முன்னர் உள்ள சிறு திருக்குளம்.

**6. நாகசேரி:-** அனந்தேசுரர் கோயிலுக்கு மேற்கே உள்ள பெரிய திருக்குளம்.

**7. பிரமதீர்த்தம்:-** சிங்காரத்தோப்பு என்று வழங்

கப்படும் திருக்களாஞ்சேரியில் உள்ளது. இங்குள்ள ஆலயம் முதலியவிவரங்களைத் திருக்களாஞ்சேரி என்னும் தலைப்பின் கீழ்க்கண்டு கொள்க.

**8. சிவப்பிரியை:-** தில்லையம்மன் கோயிலுக்கு எதிரில் உள்ள திருக்குளம்.

**9. திருப்பாற் கடல்:-** சிவப்பிரியைக்குச் சற்றுக் கிழக்கில் உள்ள சிறு திருக்குளம். உபமன்னிய முனிவர் குழவிப் பருவத்துப்பால் வேண்டிய்ழத் திருப்பாற்கடலை இறைவன் அழைப்பித்துக் கொடுத்தார். இதனைப் "பாலுக்குப் பாலகன் வேண்டியழுதிடப் பாற்கடல் ஈந்த பிரான்" என்னும் திருப்பல்லாண்டு வலியுறுத்தும். இது தீர்த்த வடிவமாக விளங்குகிறது.

**10. பரமானந்த கூபம்:-** இது நடராசர் சிற்சபைக் குக் கிழக்கே கோவிலுக்குள் உள்ள கிணறு ஆகும்.

பரமானந்த கூபம் சிவசத்தி வடிவம். ஐப்பசி மாசத்து வளர்பிறை நவமிதிதியிலே இத்தீர்த்தத்திலே நீராடி, தீர்த்தம் எடுத்து வைத்துக்கொண்டு அன்று முதல் ஓராண்டு வரை இடைவிடாது நாள் தோறும் ஓர் உளுந்து அளவு உட்கொண்டு வருவது மிகுந்த புண்ணியமாம். இத்தினத்திலே சுவாமி இடப வாகனத் திலே எழுந்தருளி வந்து தீர்த்தம் கொடுத்தருளுவர். சுக்கிரவாரம், நவமி, மாசி மாத வளர்பிறைச் சதுர்த்தசி, சூரிய கிரகணம், சந்திர கிரகணம் என்பவைகளிலே மூழ்குவது மிகவிசேடமாம்.

சிவகங்கை முதல் பரமானந்த கூபம் இறுதியாகிய இப்பத்துத் தீர்த்தத்திலும் தையமாவாசி தோறும் சுவாமி எழுந்தருளித் தீர்த்தங் கொடுத்தருளுவர்.

**ஞானப்பிரகாசத் திருக்குளம்:-** யாழ்ப்பாணத்து நல்லூரைச்சார்ந்த திருநெல்வேலியி லிருந்து, பின் சிதம்பரம் வந்த ஞானப்பிரகாச சுவாமிகள் என்பவரால் இது வெட்டப்பட்டது. ஆதலின் இஃது அவர் பெயரால் வழங்கப்படுகிறது. இத்திருக்குளத்தை இருபத்தைந்து ஆண்டுகட்கு முன் சிதம்பரத்திலிருந்த பரஞ்சோதி சுவாமிகள் முயற்சியினுல் மீண்டும் சேறெடுத்துப் படித்துறைகள் புதுக்கிச் சீர்திருத்தப் பெற்றிருக்கிறது. இக்குளத்தின் மத்தியில் மண்டபம் கட்டுவதற்குத் திட்டமிட்டு நடந்த திருப்பணி முற்றுப்பெருமல் இருக்கிறது. இத்திருப்பணியைத் தக்கவர்கள் முன் வந்து நிறைவேற்றுவது பெரும் புண்ணியம்.

மார்கழித் திருவாதிரை உற்சவம் முடிந்த பின்பு அடுத்து வரும் நாளில் இங்கு தெப்பத் திருவிழா நடத்துவார்கள்.

ஐப்பசிப் பூரத்திருவிழாவில் அம்பாள் இங்கு எழுந்தருளி வந்து திருக்கலியாணம் குறித்துத்தவம் செய்வதாக உற்சவம் கொண்டாடுவர். அன்று இரவு திருக்கலியாண உற்சவம் நடைபெறும்.

## பார்க்கவேண்டிய வேறு ஆலயங்களும் பிறவும்

**1. தில்லையம்மன்கோவில்:-** நடராசப் பெருமான் ஆலயத்திலிருந்து வடக்கே மூன்றுபர்லாங்கு தொலைவிலுள்ளது. மேற்குமுகமான சந்நிதி. பத்திரகாளிக்கும் அங்கு ஒரு ஆலயமிருக்கிறது. எதிரிலுள்ளதீர்த்தம் பத்து தீர்த்தங்களுள் ஒன்ருகும். சிவப்பிரியை என்றுபெயர்.

**2. குருநமச்சிவாய தேவர்மடம்:-** இங்கு குருநமச்சிவாயதேவர் ஆலயமும், திருப்பாற்கடல் தீர்த்தமும்

இருக்கின்றன. மாணிக்கவாசகசுவாமிகள் இத்தலத்தில் இருந்தபோது இவ்விடத்திலிருந்ததாகக் கூறுவர்.

3. அம்பலத்தாடுவார்மடம்:- குருநமச்சிவாயதேவர் மடத்துக்கு அருகிலிருக்கிறது. மாணிக்கவாசக சுவாமிகள் சொல்ல இறைவர்தமது திருக்கரத்தினு லெழுதிய திருவாசகத்திருஏடு இம்மடத்தில் பூசையி லிருப்பதாகக் கூறுவர்.

4. உமாபதி சிவாச்சாரியர்மடம்:- சிதம்பரம் புகை வண்டிநிலயத்தின் கீழ்பால் உள்ளது. சந்தனாச்சாரியருள் ஒருவரும் தில்லைவாழந்தணருமாய உமாபதி சிவாச் சாரியருக்கு இங்குஆலயமும், உற்சவமூர்த்தியும் இருக்கின்றன.

5. சேக்கிழார்கோவில்:- ஞானப்பிரகாசத் திருக் குளத்துக்கு வடகரையிலுள்ளது. இக்குளக்கரையில் பலமடங்கள் இருக்கின்றன.

6. மௌனதேசிகர்மடம்:- ஞானப்பிரகாசக் குளத் துக்கு மேற்கே ஆயிகுளக்கரையில் உள்ளது. இங்கு மௌனதேசிகர் ஆலயமும் திருவுருவமும் இருக் கின்றன. இங்கிருந்து தெற்கே அரைமைல் தொலைவில், புலிமடுதீர்த்தமும், மத்தியந்தனேசுரர் ஆலயமும் இருக்கின்றன.

7. நந்தனார்கோவில்:- இதற்குமேற்கே செங்கட் டான்தெருவில் திருநாளைப்போவார் என்னும் நந்தனா ருக்கு உரிய ஆலயம் இருக்கிறது. சிதம்பரத்துக்கு மேற்கு எல்லையில் உள்ள ஓமக்குளத்தை நந்தனார் தீ, மூழ்கி எழுவதற்கு வளர்த்த வேள்விக்குண்டம் என்ப. அங்கு நந்தனார் மடம் முதலியவைகளும் இருக்கின்றன.

**8. பொன்னம்பலசுவாமிகள்மடம்:-** இது மன்னார்குடி ரோட்டிலுள்ளது. அங்கு ஆலயம் முதலியவை இருக்கின்றன.

**9. இளமையாக்கினர்கோயில்:-** புலிக்கால் முனிவர் பூசித்தஇலிங்கம் இக்கோவிலில்உள்ளது. திருநீலகண்ட நாயனார் மூழ்கி இளமைபெற்றதீர்த்தம் இவ்வாலயத்தின் எதிரிலிருக்கிறது. இவ்வாலயத்தில் நகரத்திலுள்ளவர்கள் ஞாயிற்றுக்கிழமை மாலை எழு மணிக்கு ஒன்று கூடி வாரவழிபாடு செய்துவருகின்றனர்.

**10. அகத்தியர்கோயில்:-** இது பழனி தவத்திரு சாதுசுவாமிகளால் அகத்தியமுனிவருக்கு ஏற்படுத்திய திருக்கோவில். லோபாமுத்திரையம்மைக்கும் ஆலயம் இருக்கிறது.

**11. அனந்தேசுரர்திருக்கோயில்:-** பதஞ்சலிமுனிவர் பூசித்தது. அனந்ததீர்த்தம் இவ்வாலயத்தின் முன்னும், நாகச்சேரிதீர்த்தம் பின்னும் இருக்கின்றன.

**12. திருக்களாஞ்சேரி:-** பிரமபுரீசர் ஆலயமும் பிரமதீர்த்தமும் சந்தானச்சாரியருள் ஒருவராகிய மறைஞானசம்பந்த சிவாச்சாரியர் ஆலயமும் இருக்கின்றன.

—ஃ—



# ஸ்ரீ காசியாத்திரை விளக்கம்

---

இதன்கண் சென்னையில் இருந்து பம்பாய் வழியாக அரித்துவாரம் ரிஷிகேசம் வரை சென்று காசிக்குத் திரும்பும் வகையிலும், காசியிலிருந்து கயா, கல்கத்தா வழியாகச் சென்னையை அடையும் விதத்திலும், இடையேயுள்ள முக்கியமான தலங்கள் பட்டணங்கள் ஆங்காங்குள்ள மூர்த்தி, தீர்த்தம், ஆலயம் முதலிய பிற விசேடங்கள், நகரின் தொலை, புகைவண்டிக் கூலி தங்கும் இடங்கள் முதலிய எல்லாவற்றையும் நன்கு விளக்கி எழுதப்பட்டிருக்கின்றது. சுருங்கக் கூறும் இடத்து இப்புத்தகத்தின் உதவியைக் கொண்டே பல முறை யாத்திரை செய்துவந்த பழக்கம் உடையவர்கள் போல் யாத்திரை செய்து வரலாம்.

இரண்டாம் பதிப்பு 0—12—0

சிதம்பர சிவாலய தரிசனம் 0—12—0

கிடைக்கும் இடம்:-

மௌன சுவாமிகள் மடம்,

சபாநாயகர் தெரு,

சிதம்பரம்.